# வேர் விட்ட பூ

# வேர் விட்ட பூ

வேர் விட்ட பூ

சங்கத் தமிழன்

sachinsamy40@gmail.com

மின்னூல் வெளியீடு : FreeTamilEbooks.com



அட்டைப்படம் - லெனின் குருசாமி - guruleninn@gmail.com

மின்னூலாக்கம் - ஐஸ்வர்யா லெனின் - aishushanmugam09@gmail.com

## வாசக நெஞ்சங்களுக்கு,

செம்மொழியில் இன்னொரு கவிபாடும் குயிலாய் உங்கள் கரங்களில் தவழ வந்திருக்கேன். இங்கு எத்தனையோ கவிதைகளும், கவிஞர்களும் சொல்லாத இலக்கியத்தை நான் என்ன சொல்ல போகிறேன்? என்ற எனக்குள்ளான கேள்விகளை தேடிப்பார்த்தேன். கள்ளிப்பாலுக்கிடையில் தாய்ப்பாலை மட்டுமருந்தி வெட்கையில் துடிக்கும் சிற்றின்ப உயிராய் விளைச்சல் நிலத்தின் வியர்வையில் குளித்து பேனாவை மூடிவைத்து கையருவாள் எடுத்து கழனிக்கு சென்ற வறுமையின் வலிகள் எனக்குள் இன்னும் மாறாதிருக்கிறது. சமுக கட்டமைப்பில் தனியுரிமை சுதந்திரத் தின் வலிகள் தாளமிட்டுக் கொண்டேயிருக்கிறது ஏழிசை கீதத்திலும், தேசிய கீதத்திலும். அது இன்றுவரை சேரவில்லை . அந்த வலிகள் துப்பிய சிந்தனை உணர்வின் வார்த்தைகளை சிறுகவி பாடி தந்திருக்கிறேன். எழுத்துக்களை கோர்த்து எண்ணங்களை சேர்த்து கவிபாடி பார்த்தேன். அவை புதிய சந்தோசத்தையும், புதியதொரு உணர்வையும் தந்தது. கம்பன் வீட்டு கைதடியும் கவிபாடும் என்ற சொல்லாடலை, செம்மொழி நாட்டின் சிறுதுரும்பும் கவி சிறகு விரிக்கும் என சொல்லத் துடிக்கிறேன். கடந்து போன காலங்களை நிதானத்தோடும் உணர்வோடும் திரும்பி பார்த்தால் அந்த கதைகளும், கவிதைகளும், இலக்கியங்களும், வரலாற்று நூல்களும் நம் மனசாட்சியை உதைத்து விட்டு செல்லும் அருவிகள் நதிகளாக, நதிகள் ஆறுகளாக, ஆறுகள் சிறு ஓடையாக பிரிந்து செல்வதைப்போல் இலக்கிய சிந்தனைகளில் உதிர்த்த வார்த்தை நீர்களை சிறு ஓடையாக மடை மாற்றி அனுப்பி விட்டேன். நீர் சென்ற பாதை சோலையாக, சொல் நீர் சென்ற பாதை அறிவுச் சாலையாக, சிறக்க பண்பட்ட சிந்தனைகளில் மனிதநேயம் வாழ்ந்து செல்லட்டும். இறப்பை நோக்கிய பயணத்தில் இனியில்லை இங்கொரு பிறப்பென்று வாழ்வோம். அதை இன்னலின்றி வாழ்வோம், செம்மொழி நாட்டின் சிறுதுரும்பும் கவி சிறகு விரிக்கட்டும்.

-சங்கத் தமிழன்

# வாழ்த்துரை ;

எம்மொழியாம் செம்மொழியில் எத்தனையோ புத்தகங்கள் இருந்தாலும், தமிழன்னைக்கு ஆபரணம் சூட்டுவதில் கவிதை நூல்களும் முக்கியப் பங்கு வகிக்கின்றன. எண்ணச் சிதறல்களை வண்ணத் தூரிகையாக்கி கவி என்னும் ஓவியம் படைத்து கண்களுக்கு விருந்தளிப்பவனே கவிஞன். அவ்வகையில், நம் இயல்பு வாழ்க்கையில் பல நேரங்களில், பல இடங் களில் சந்திக்கும் நிகழ்வுகளை சிந்திக்கும் வரிகளாக்கி, நம் கைகளினில் தவழும் இப்புத்தகம் புதுக்கவிஞரின் படைப்பு என்றால் நம்ப முடியாத அளவிற்கு வாழ்வியல் நிகழ்வுகளை எடுத்தியம்புகிறது. தமிழ்த் தாயின் ஒரு பிள்ளையாய் உருவெடுக்கும் கவிஞர் பழமையையும், புதுமையையும் புரிந்து கொள்ளும் வண்ணம் மலிந்து கிடக்கும் சமூக நீதிகளை, மனிதம் மறக்கடிக்கும் சாக்கடை சாதிகளை, மகிழ்ச்சி நிறைந்த மலரும் நினைவு களை, மனம் தேடும் சாதனைக் கனவுகளை, கொள்ளையடித்த மங்கை யின் காதலை, வில்லங்கம் பேசும் வீணோர் விவாதங்களை, வினோதம் செய்யும் வீம்புப் பேச்சை, வியக்க வைக்கும் விதைத்த விதையை, விடியல் தேடும் வீண்பிரச்சினைகளை, வீசியடிக்கும் புயல் காற்றை, பேசி சிரிக்கும் நினைவுகளை, தீண்டலை, சீண்டலை, காதலை, அதனால் சாதலை, பெண்ணியத்தை, கண்ணியத்தை, இயற்கையை, அதற்கு முரண்பட்ட செயற்கையை, சமூகச் சாடலை, தமிழ் தேடலை கவி வழி கரை சேர்க்கும் சங்கத் தமிழனுக்கு தமிழ்வழி கைகோர்த்த பேனாவின் மைந்தர்களால், 'வேர் விட்ட பூ' விருட்சமாகி விழுதுகள் பரப்பி, தரணிபோற்ற தமிழ் வளர்த்து, கலைத்தாகம் தீர நூல்கள் பலதந்து,கன்னித் தமிழின் கைபிடித்து கரையேறி மறை சொல்ல வாழ்த்துக்கள் பல சொல்லும்...

-பேனாவின் மைந்தர்கள் குழு

# வாழ்த்துரை ;

உணர்வியக்கத்தின் தலைமைக்கூறு மொழி. மொழியின் படிநிலையுற்ற ஒழுங்கியக்கம் தான் பாட்டும் அதன் உட்கருத்தும். எனவே, மொழிச் சிதைவு கருத்தைச் சிதைப்பதும், கருத்துச் சிதைவு உணர்வைச் சிதைப்ப தும், உணர்வுச் சிதைவு உளத்தைச் சிதைப்பதும், உளச் சிதைவு உலகிய லைச் சிதைப்பதும் ஒன்றோடு ஒன்று தொடர் விளைவாகும். மொழியின் மலர்ச்சியே பாட்டு. பாட்டுணர்வால் தான் மாந்தன் மீமிசை உயிரு ணர்வை எட்டுகிறான். மற்ற உணர்வுகள் மாந்த உணர்வுகளிலேயே அவனைத் தேக்கி வைத்திருக்கையில், பாடல் புறவுணர்வுத் தளைகளை கட்டறுத்து, உலகியல் கூறுகளிலிருந்தும் விடுவித்து, அவனை மீமிசை மாந்த நிலைக்கு உயர்த்துகிறது. பாட்டுணர்ச்சி தாழ்ச்சி யுறுவதால் அவனின் உணர்வுயர்ச்சிக்கு சறுக்கல் ஏற்படுத்துகிறது. உயிர்மைக்கு அயர்வு ஏற்படுகிறது. ‘பா’ என்பது பாடல் தழுவிய கருத்து மொழி என்ற நமது பண்டைய பொருளின் நிகழ்கால எடுத்துக்காட்டாய் விளங்குகிறது ‘வேர் விட்ட பூ’. இக்கவிதைப் பாடல்கள் கவிஞர்களின் உள்ளதிலிருந்தும் இயற்கையாக வெளிப்பட்டு, நமது மனமும் அறிவும் வயப்பட, உணர்வும் எழுச்சியும் மேம்பட்டு, புறநிலை அழுத்தத்தால் பீறிக் கொண்டு வெளியே றும் விழிப்புணர்வுப் பெட்டகம். கவிஞன் என்பவன் மனித குலத்தின் மன சாட்சியின் குரலாக ஒலிக்க வேண்டும் என்பது தான் உண்மை . தமிழ் இலக்கியத்தில் மனித குலத்தின் மனசாட்சியின் குரலை ஒரு கணத்தில் ஒலித்த கவிஞர்கள் பண்டைய காலம் முதல் பாவலரேறு பெருஞ்சித்தனார் காலம் வரை பலர் இருக்கத்தான் செய்தனர். ஆனால், இன்றளவில் அப்படிப்பட்ட படைப்பாளிகளுக்கான தட்டுப்பாடும் பஞ்சமும் ஏனோ இந்த தீந்தமிழ் இனத்திற்கு வந்துவிட்டது. ஒழுங்கற்ற ஓசையை விட ஒழுங்கான ஒலி உயிர்க் கவர்ச்சியுடையது என்ற கூற்றை மெய்ப்பிக்க ஒலியொழுங்கோடு உணர்வும் சேர்ந்து உயிர்க்கவர்ச்சியுடன், உளக் கவர்ச்சியும் ஒன்றாகக் கூராக்கி கடைக்கோடிப் பாமரனின் மானசாட் சியையும் கீறி உழுது உழுக்கிவிடுகிறது இந்த வேர் விட்ட பூ. கருத்தாழம் நிரம்பிய தேர்ந்த சொற்கள், சுற்றி வலைக்காத சொல்லாட்சி, வளங்க வழுவிய பொருத்தமான சொற்கள், ஒலி நயத்தால் இணைகின்ற சீர் அமைப்பு என அனைத்து விடயங்களிலும் எளிமையும் இனிமையும் கொண்டு உள்ளத்தை உழுக்கியெடுக்கிறது கவிதைகள். உணர்வு சார்ந்த ‘சங்கத்தமிழன்’ பாடல்கள்

உணர்வுள்ள உள்ளங்களை மட்டுமல்லாது, உணர்வற்ற உள்ளங்களையும் தொட்டுச் சிந்திக்க வைக்கும். சாதி மாதம் பிரிவு வேற்றுமை போன்ற பிற குணங்கள் நமது மக்களின் உள்ளங்களை ஆட்கொண்டு அலைக்கழித்துக் கொண்டிருக்கும் இவ்வேளையில், இந்த 'வேர் விட்ட பூ' என்னும் இவ்வற்புதப் படைப்பை தமிழினம் தன் நிலைப்பாட்டு மேன்மைக்கு பயன்படுத்திக் கொள்ளுமாக

-திருமுருகன் காளிலிங்கம்

# கொரோனாவை கொண்டாடிய காலம்

உகானில்
உயிர்த்தெழுந்து
உயிர் குடித்து
உயிர் வாழும்
உமையவளே

இத்தாலியை
இரும்ப வைத்து
இவ்வுலகினை

இருட்டடித்த
இறக்கமற்ற
இராட்ச்சியே

அதிகார திமிரும்
அராஜகப் போக்கும்
அகிலத்திலே

அமெரிக்கா என்ற
அகந்தையை
அடித்து நொறுக்கிய
அரக்கியே

எந்த தேசமென்றாலும்
எந்த நேரமென்றாலும்
எனக்கினை

எவருமில்லை யென்று
எமனையே

எச்சில் விழுங்க வைத்தவளே

இரண்டடி
இடைவெளியில்
இணையான நட்போடு

இணைபிரியாமல்
இரண்டற கலந்து வாழ
இவ்வுலகிற்கு சொன்னவளே

எந்தேசம் வந்ததில்
எந்த தேசத்திலுமில்லா
ஏற்புரையும்

ஏற்றி வைத்தழகும்
எங்கும் நீ கண்டதுண்டா

குல்லாவைப் போட்டு
குறைசொல்லி
கொஞ்சநாள்

குதுகுலமாய் மகிழ்ந்தோம்
குடிவந்ததற்கும் _எம்
குல மக்களோடு
கூடி வாழ வந்ததற்கும்

கைகளையும்
கைகண்ட பாத்திரத்தாலும்
ஓசை எழுப்பி

ஒற்றுமையாய் மகிழ்ந்துன்னை
ஒவ்வோர் மக்களிடமும் சேர
ஒலி தந்து உதவினோம்

ஒன்பதாம் தேதி
ஒன்பது மணி

ஒன்பது நிமிடம்
ஒன்பது நொடிக்கு

ஒன்பது விளக்கோடு
ஒவ்வோர் வீட்டின்
ஒளி கண்டு நீ
ஒளிந்து கொள்ள உதவினோம்

வீதியெங்கும்
வீடெங்கும் தவறாமல்
குடியேற கூச்சல்

குரலோடும்
கொழுந்த நெருப்போடும்
கொடிபிடித்து வரவேற்றோம்

பாதையிலே நீ நடந்தால்
பாதமெல்லாம் நோகுமென்று
பாதையெங்கும் மலர்த்தூவி

பாரதத்தை உலா வர
பாதைப் போட்டு தந்தோம்

இத்தனை செய்தும்
இரக்கமற்ற அரக்கிக்கு
இன்னும் போதவில்லை
மிச்சமீதி யுண்டு வாழும்

மக்களை
மிச்சமின்றி புசித்து
மிதப்போடு இன்னும்
மிரட்டுகிறாய்

வந்தது நோயென்றும்
வறிய மக்களுக்கு உதவிட
வளமான மனிதரெல்லாம்
உளமாற தந்தருள

அரண்மனை வாயிலில்
அண்டா வொன்றிருக்கும்
அனைவரும் அதிலிட

அங்கதேசத்து மன்னன்
அறிவிப்பொன்றை யிட்டார்

பணம் படைத்த மனிதரும்
மனம் படைத்த மனிதரும்
இல்லையென்று கூறாமல்
இனமென்று பாராமல்

பொன்னும் பொருளும்
பொற்குழி அண்டாவில்
போட்டு உதவினர்

அங்கதேச மன்னன்
அகமகிழ்ந்து
அண்டாவை காணவில்லை யென

அறிவிப்பொன்றை
அறிவித்தார்

அங்கதேச மக்களோ
அலறி அடித்து
அங்குமிங்கும்
அலைந்து தேடினர்

சத்தான குளத்தில்
சாதுரெண்டு ரத்த
சகதியில்

சத்தமின்றி மாண்டதற்கு
சாதாரண மக்களோ
சத்தமிட்டு அழுதனர்

அதை கடந்து
அடுத்தடி வைத்தால்
ஆறிக் கிடந்த கருப்பை
ஆளறிப் பாதையிலிட்டு

அருவருப்பாய் பேசி
அண்டாவை தேடி வந்து_பொற்குழி
அண்டாவையே மறந்தனர்

பிறிதொரு நாளில்
அசந்துறங்கும் இரவில்
அங்கதேச மன்னன்

அங்கதேச மக்களுக்கு
அறிவித்தார்

லட்சம் கோடி 15
லட்சம் கோடி 20 அக
லட்சனமாய் கேட்டெழுந்தால் முக

லட்சனம் போய்விட்டது
கண்ட கனவில்

புத்தகம் படித்தால்
புத்திசாலி ஆகலாம்
லக்கன கிரகத்தை படித்தால்

லக்கான நாசாவில் சேரலாம்
கொரோனா புண்ணியத்தில்
கூடுதல் தகவல்

எட்டாயிரம் கோடி
எம் தேச மக்களுக்கு

ஐயாயிரம் கோடி
ஐயமின்றி கிடைத்தது

கொரோனாவே உன்னை
கொல்லக் கூர்மையான
கொடிய ஆயுதம் காண

கோடி தேசமெல்லாம் தேட
அங்கதேச மக்கள் மட்டும்
கோமியமருந்தி உன்னை
கொல்கிறார்கள்

எம் தேசத்தை
எடுத்தெறிந்து வெளியேற
எமனின் கைப்பாவையே நீ
எடுத்தாலும் முடிவு

அங்கதேச மன்னனின்
அரவணைப்பில் உள்ளது
ஆயிரம் காரியங்கள்

அரங்கேற்றம்
ஆயுதமாக நீ

அத்தனையும் நிறைவேற்றியே
அரவணைப்பின் பிடிதளரும்
அதுவரை நீயும் நானும்

அணைப்பற்று
அளவற்ற போதிய இடைவெளியோடு
அன்போடு பயணிப்போம்

# அவளின்றி அசையா ஓர் அணு

கூட்டுப் புழுவின்
பரிணாம வளர்ச்சியே
பட்டாம்பூச்சி _ என்
கூட்டுப் பறவையின்
பரிணாம வளர்ச்சியோ
கூட்டுப் புழுவாய்
துடிக்க வைக்கிறது

பீனிக்ஸ் பறவையாய்
மீண்டும் மீண்டும்
எழுகிறேன்_ உன்
பார்வை தீயில்
சாம்பலாகி

வளைந்து நெளிந்த
நதிகளின் பாதையைப் போன்ற
உன் வாலிப வனப்பில்
நீந்திக் கடக்க
நித்தம் வேண்டுகிறேன்

ஆயிரம் பிறைகள்
பூச்சூடி நின்றாலும் உன்
பிறை நிலா நெற்றிக்கு
ஈடானதில்லை

ஈடில்லா நெற்றியதில்
என் குருதி
பொட்டு வைக்க

குடி தெய்வம் கைகொடுக்க
காலத்திற்கும் வேண்டிருக்கேன்

விதவிதமான
சேலையில் நீ
கட்டி நடந்த வீதியெங்கும்
தேரோட்டம் நடக்கிறது
நாளெல்லாம்

பரிசம் போட
காத்திருக்கேன் உன்
பாசத்திற்கே
ஏங்கி யிருக்கேன்

ஆசை வச்சி
நானிருக்கேன் என்
ஆயுள் வரை
காத்திருப்பேன்

பேச துடித்த
வார்த்தை நூறு
பேசிப்போன
வார்த்தை வேறு

உள்ளுக்குள்
உவமையெல்லாம்
உன் பெயரை
உளறுது

உயிர்க் கூட்டில்
ஊசலாடுது உன்
நினைவே அங்கு
நிழலாடுது

பேச்சிப்பாறை ஓரத்தில
பிச்சுப் பூவு மலர்ந்திருக்கு
ஈரமில்லா கல்லில்

எப்படித்தான் வந்ததோ
ஆராய்ந்த என் மனசுக்குள்
அழகியே உன்னை காட்டுது

கணுக்காலில் வலியிருந்தால்
கடந்த தூரம் அதிகமாம்
அணுக்களெல்லாம் வலிக்குதடி என்
ஆசை கொஞ்சம் அதிகமோ

தூண்டி முள்ளில் சிக்கி
துடிக்கு மந்த
மீனைப் போல்
தூரத்திலே கண்டாலே

துடிக்கும் என் இதயத்தை
தொட்டில் கட்டி ஆட்டிடடி என்
துயரை கொஞ்சம் கேட்டுடடி

பித்தம் அதிகமென்றால்
சித்தரிடம் செல்லலாம் என்
சித்தமெல்லாம் உன்
பித்தமென்றால் எந்த
சித்தரிடம் நான் செல்ல

ஆசை குளத்தில்
நீந்தித் திரிபவளை
எந்த வலையை வீசி
நான் பிடிக்க

ஆயுளுக்கும் என்னோடு _ நீ
நிலைத்திருக்க
ஆருடம் கேட்டு
யாரிடம் நிற்க

தலைபாரம் வச்சி
வலிக்காம நடந்திருக்கேன்
வலிக்காமா நீ வந்த மனசுக்குள்ள

வசதியா இல்லையென்று
வலி தந்து போகிறாய் என்
வாலிபத்தை நசுக்குகிறாய்

ஆனாலும்
காத்திருப்பேன்
அந்த ஒரு நாளுக்கு
ஆசையெல்லாம் பூவா
வெடிச்சி யிருக்கும்

வெடிச்ச பூவ நீ
முடிச்சி யிருக்க
வெள்ளந்தி சிரிப்போடு
நாமிருக்க
விளையாடி தீர்க்க
இரவிருக்க
விடியாத இரவை
நாம் தேடியிருக்க _ ஒரு
நாள் வரும்
நாம் சேர்ந்திருக்க அதுவரை
காத்திருப்பேன் உன்
கை பிடிக்க

அவனின்றி அசையா
அகிலத்தில் என்
அகிலமும் அவளே என்
அணுவும் அவளே

அவளின்றி ஓர்
அணுவும் அசையாது
என்னுளே

# வலசம் போன வாலிபம்

பகல் கனவு
பலித்து விட்டது
பாலைவனத்தில்
பயணம் செய்ய

நீரைத் தேடி
நித்தம் அலைய
விலங்கோடு
விலங்காக வாழ

விடியாத வாழ்வை
விடிய வைக்க
விமானப் பறவையில்
விழியோர கண்ணீரோடு
விடை பெற்ற பயணம்

துக்கத்தை
தூளில் கட்டி
தோல் சுமந்த
தோழமையற்ற பயணம்

எட்டிப் பார்த்தேன்
எதுவும் தெரியவில்லை
வெள்ளை மலைகள்
வீட்டை மட்டுமல்ல
நாட்டையும் மறைத்து விட்டது

நாலு மணிநேர பயணம்
நாவரண்ட நிலத்தில்

நங்கூரமிட்டு நின்றது

பச்சையாடை உடுத்திய
பருவம் வந்த பெண்ணிடம் _ என்
பயணத்தை தொடங்கி
பாலைவனத்தின்

நிர்வாணத்தை
நிரந்தரமாக உடுத்திய
நிர்கதி பெண்ணிடம்
நின் சரணடைந்தேன்

வானளாவிய கட்டிடம்
வந்து போகும் மகிழ்யுந்து
வளமான நாட்டின்
வசதியை சொல்லியது

ஒத்த நெல்லு போட்டு
கொத்து நெல்லு விளையும்
செங்காத்து பூமியிலே
செழிப்பொன்றும் இல்லையோ

விளையாத மண்ணுல
விடியாத வாழ்வுக்கு
விடியலை தேடும்
விருந்தாளியா வந்திருக்கேன்

புரியாத மொழியில்
புத்தி கொஞ்சம் கிறுக்குது
புரிந்து கொள்ள நாளாச்சி
புன் சிரிப்பு வந்திடுச்சி

மாசத்துக்கு ரெண்டு
மடல் வரும் _ அதில்
மறைந்திருக்கும் என்
மகிழ்ச்சி யெல்லாம்

கடல் தாண்டி வந்ததில்
கண்ணீரின் இனிப்பு
கனவோட சிரிப்பு
காலைப் பொழுதில் மறைந்திடும்

வெளிநாட்டுப் பணம்
வெள்ளையா இருக்கும்
விளைச்சல் நல்லா தரும்
வெள்ளந்தி சிரிப்பும் வரும்

அனுப்பும் பணத்தில்
ஆசை கொள்ளாதீர்
ஆங்காங்கே

ரத்தத்துளிகளும்
கண்ணீர துளிகளும்
கறை படிந்து இருக்கும்

முகர்ந்து பார்த்து விடாதீர்
வெள்ளை பணத்தில்
வியர்வை துளிகளோடு
ரத்த வாடையும் வீசும்

தலையணை மட்டுமே
தடமறியும் _ என்
கண்ணீரின் ஆழம்
எதுவரை யென்று

வேலையின் சுமையும்
விழுந்தால் எழாத உடலும்
நாளும் சோர்வை தரும்
நான் பட்ட கடனோ
நாளெல்லாம் எழுப்பி விடும்

தலைவச்சி தூங்க
தாய் மடி தேடுவேன்
தலை கோதி அணைக்க

தாரத்தை தேடுவேன்
தாங்காத கடனோ_ என்னை
தட்டியெழுப்பி விடும்

சூடின்றி உணவில்லை
சுவையறிந்த உணவில்லை
காரத்திற்கு என் கண்ணீரு
உப்புக்கு அவள் கண்ணீரு
உழைத்து படுத்தா
பாயெல்லாம் கண்ணீரு

பொங்கலுக்கு போய் வந்தேன்
பொசுங்கிப் போன பயிரை காண
பாலைவனத்து மணலாட்டம்
பச்சைத் தளிர் கருகியிருக்கு

வலசமாறி போனதில்
வயலுக்கும்
வயசு கொஞ்சம் ஆயிடுச்சு
வலசமாறி போனதில் என்
வாலிபமும் கொஞ்சம் மாறிடுச்சு

# இந்தி வேண்டாம் போ.....

தொல்காப்பியம்
தொன்னூல் விளக்கம்

தொகை நூல்கள்
தொன்மை வரலாறு

இவை அனைத்தும் போதும் _படிக்க
இந்தி வேண்டாம் போ...

ஐம்பெரும் காப்பியம்
ஐஞ்சிறு காப்பியம்

ஐவகை பூதங்கள்
ஐவகை நிலங்கள்

இவை அனைத்தும் போதும் _படிக்க
இந்தி வேண்டாம் போ...

மலையும்
மலை சார்ந்த வாழ்வும்

காடும்
காடு சார்ந்த வாழ்வும்

வயலும்
வயல் சார்ந்த வாழ்வும்

கடலும்
கடல் சார்ந்த வாழ்வும்

மணலும்
மணல் சார்ந்த வாழ்வும்

இவை அனைத்தும் போதும் _படிக்க
இந்தி வேண்டாம் போ...

உலகத்தோடு
உறவாடி வாழ ஒரு மொழியிருக்கு

உயிர் கொடுத்த
தாயவளின் செம்மொழியிருக்கு

உறவாடி
களிக்க எம்மொழியிருக்கு

உயர்தனிச்
செம்மொழியோ உலகமெங்குமிருக்கு

இவை அனைத்தும் போதும் _படிக்க
இந்தி வேண்டாம் போ...

வல்லினமிருக்கு
வலிமையோடு வாழ

மெல்லினமிருக்கு
மேன்மையோடு வாழ

இடையினமிருக்கு
இசையோடு வாழ

இவை அனைத்தும் போதும் _படிக்க
இந்தி வேண்டாம் போ...

முதற் சங்க மொழியும்
இடை சங்க மொழியும்

கடைச்சங்க மொழியும்
முத்தமிழ் சங்கமாயிருக்கு

இவை அனைத்தும் போதும் _படிக்க
இந்தி வேண்டாம் போ…

சொல்லுக்கோர் இலக்கியம்
சுவைக்கோர் இலக்கியம்

பண்புக்கோர் இலக்கியம்
பண்டைய தமிழுமோர் இலக்கியம்

இவை அனைத்தும் போதும் _படிக்க
இந்தி வேண்டாம் போ…

அகப்பாட்டில் தப்பித்தால்
புறப்பாட்டில் வரும்

புறப்பாட்டில் தப்பித்தால்
அக புற பாடலின்

ஓங்கு பரிபாடலில்
ஓங்கி வாழும் தமிழ்

இவை அனைத்தும் போதும் _படிக்க
இந்தி வேண்டாம் போ…

உடல் மேன்மைக்கு
சுக்கு மிளகு திப்பிலி

உன்னறிவு மேன்மைக்கு
திரிகடு கமென்னும்

அறிவியல் சிந்தனையை
அறிவாய் என் தமிழில்

இவை அனைத்தும் போதும் _படிக்க
இந்தி வேண்டாம் போ…

அரிதாய் பிறந்த மானிடா
அன்னை தமிழை கற்று

அறிவை பெருக்கிக் கொள்
அவ்வையின் ஆத்திசூடியால்

இவை அனைத்தும் போதும் _படிக்க
இந்தி வேண்டாம் போ...

கம்பராமாயணமும் இருக்கு
கம்பரசமும் இருக்கு

கண்ணகி காப்பியமிருக்கு
காவிய நூல்களுமிருக்கு

இவை அனைத்தும் போதும் _படிக்க
இந்தி வேண்டாம் போ...

அறத்துப் பாலில் எங்கள்
அறவாழ்வு மிருக்கு

பொருட்பாலில் எங்கள்
பொருள் வாழ்வுமிருக்கு

இன்பத்துப்பாலில் எங்கள்
இல்லற வாழ்வுமிருக்கு

இவை அனைத்தும் போதும் _படிக்க
இந்தி வேண்டாம் போ...

கிழடி ஆய்வு என்
மூத்தோர் வாழ்வியல்

செப்பேடுகள் என்
செம்மொழி வாழ்வியல்

கற்கோயில் எழுத்து என்
கனிதமிழ் வாழ்வியல்

இவை அனைத்தும் போதும் _படிக்க
இந்தி வேண்டாம் போ...

ஆசைப்பட்டு கற்பேன்
ஆர்வத்தில் கற்பேன்

பேதமற்று கற்பேன்
பேசுவதற்கும் கற்பேன்

எம்மொழியையும் கற்பேன்
எம் மொழியோடு சேர்த்து

எம் மொழியை அழிக்கும்
எம் மொழியையும் கற்க மாட்டேன் எனக்கு
இந்தி வேண்டாம் போ....

# தாலாட்டுப் பாடல்

தாலாட்டுப் பாடுகிறேன் என்
தங்கமே நீ கண்ணுறங்கு

பஞ்சம் வந்த பூமியிலே
பாலகனே நீ பிறந்து
பட்டினியில் நானிருந்து
பாலில்லா மார்பிலணைத்து
பாலகனை ஏமாற்றி நான்

தாலாட்டுப் பாடுகிறேன் என்
தங்கமே நீ கண்ணுறங்கு

சோளக்கதிரறுத்து
சொக்கனுக்கு படியளந்து
சோலியெல்லாம் முடித்ததற்கு ஒருபடி
சோளம்தான்டா கூலி உங்கப்பனுக்கு
சோர்வேயில்லாமல் நான்

தாலாட்டுப் பாடுகிறேன் என்
தங்கமே நீ கண்ணுறங்கு

அந்தி விடிஞ்சா
ஆத்தா நான் களையெடுக்க
ஆலமர ஊஞ்சலிலே
அழுவாம நீயிருக்க நான்

தாலாட்டுப் பாடுகிறேன் என்
தங்கமே நீ கண்ணுறங்கு

ஆடி விதப்புல
ஆத்தா நான் விதைக்கையில
ஏர்மாடு முன்நடக்க
என்முந்தானையில் நீயிருக்க நான்

தாலாட்டுப் பாடுகிறேன் என்
தங்கமே நீ கண்ணுறங்கு

ஓலைக் குடிசையில
ஒழுகிற மழைத்துளியிலும்
மார்கழி குளிரோ
மகனே உன்னை வதைத்தாலும்
மார்மேலே ஊஞ்சல் கட்டி
மகனே நான்

தாலாட்டுப் பாடுகிறேன் என்
தங்கமே நீ கண்ணுறங்கு

கள்ளிங்காட்ட சுத்தி வந்து
கருவேலம் முள்ளு பொறுக்கி
பொழுதுசாய வீடு வந்து
பொங்கி தரும் உணவில்
நெய்யூற்றி ஊட்டிவிட
நேர்த்திக்கடன் தீரலடா
பாச நெய்ய நானூட்ட
பழைய கோணியில் நீயுறங்க நான்

தாலாட்டுப் பாடுகிறேன் என்
தங்கமே நீ கண்ணுறங்கு

பால்வழிஞ்ச உன் சிரிப்பு
பல்லில்லா உன் சிரிப்பு
ஆத்தா முகம் கண்டு
அடங்காத உன் சிரிப்பு
தத்திநட நடக்கையிலே _ கை
தாளமிட்ட உன் சிரிப்பு
தூளியிலே ஆட்டிவிட

தூக்கத்திலும் உன் சிரிப்பு
மாமாங்கம் நான் ரசிக்க

தாலாட்டுப் பாடுகிறேன் என்
தங்கமே நீ கண்ணுறங்கு

பாலகனை வீட்டிலிட்டு
பாடுபட சென்றாலும்
பட்ட கஷ்டமெல்லாம்
பசியோடு பறந்திட அந்த
பால்முக சிரிப்பை பார்க்க நான்

தாலாட்டுப் பாடுகிறேன் என்
தங்கமே நீ கண்ணுறங்கு

பிள்ளைப் பித்தமெல்லாம்
பெரும் சுமையாய் ஏறி நிற்க
பிரண்டையை கட்டிக்கொண்டு
பேதலித்து நின்றாலும் நீ
பேசும் வார்த்தையில்
பிறவி பயன் நானடைய

தாலாட்டுப் பாடுகிறேன் என்
தங்கமே நீ கண்ணுறங்கு

என் பிறப்பே ஏனென்று
எண்ணிப் பார்க்கு முன்னே
கற்ப பையில் காவலிருந்து
என்னைக்
காக்க வந்த காவலனே
உதிரத்தில் உருவான
உத்திரத்து நாயகனே
என் வயிற்றில் நீ உதிக்க
என்ன தவம் செய்தேனோ
என் மாணிக்கமே நான்

தாலாட்டுப் பாடுகிறேன் என்
தங்கமே நீ கண்ணுறங்கு

ஏட்டறிவும் இல்லையடா
எழுத்தறிவும் இல்லையடா
முப்பாலும் தெரியாததடா
தெம்மாங்கு மெட்டுக்கட்டி
தேனே நான்

தாலாட்டுப் பாடுகிறேன் என்
தங்கமே நீ கண்ணுறங்கு

# என் மண்ணோட வாசம்

கடல் தாண்டி கரை சேர்ந்து
கடன் தீர கண்ணீர் விட்டு
கஞ்சி தந்த மண்ணையும்
கருவில் சுமந்த தாயையும்

விட்டெரிந்து வந்ததில்
விழியோர கண்ணீரம்மா
பாலைவனத்தில் பாடுப்பட்டு
பட்ட சூட்டில் தலை தூக்கி

ஏருழுத வயலை எண்ணி
ஏங்கிப் பார்த்து அழுகுதம்மா கண்கள்
ஏங்கிப் பார்த்து அழுகுதம்மா

மேலக்காத்து வீசி வந்து
மேனி தழுவி சென்றதம்மா
மழைக்காத்து வீசி வந்து
மனங்குளிர செய்ததம்மா

சேற்று வயல் நாற்றெல்லாம்
சேதி சொல்லும் எனக்கம்மா
நண்டு நத்தை வாசமெல்லாம்
நாசியிலே நிக்குதம்மா

வரப்புகளை உயரத்திக்கட்ட
வம்பு செஞ்ச அப்பனம்மா
தலை குனிஞ்ச கதிர் நெல்லு
தலை சீவி விட்டதம்மா

வந்து வந்து போகுதம்மா
வயல் காட்டு நெனப்பெல்லாம்
வறுத்தெடுக்கும் வெயிலில்
வந்து வந்து போகுதம்மா
வட்டிக்கடை கடனெல்லாம்

சல்லிக்கட்டுக் காளைமாட்ட
சவுக்கியமா பார்த்துக்கம்மா
புதுச்சட்டை கேட்ட தங்கைக்கு
பொங்கலுக்கு வாங்கி கொடும்மா

தைமாதம் பெரியவளுக்கு
தங்க கொடி செஞ்சிடம்மா
அப்பாவுக்கு மருந்தெல்லாம்
அப்பப்ப வாங்கிக் கொடும்மா

அயிரை மீனை நீயுண்டு
ஆயுளை கூட்டிக்கம்மா
அடுத்த வருசம் வந்திடுவேன்னு
அத்தை மகளிடம் சொல்லிடம்மா

வயசை வட்டியாக்கிய
அப்பனிடம் சொல்லிடம்மா
முதலுக்கு மூத்தப் பிள்ளை

மூனுகடல் தாண்டி யிருக்கேன் உங்கள்
மூச்சுக்குள்ளே அடைச்சுடுவேன்
மூத்தப்பிள்ளை நானிருக்கேன்

# மீண்டுமொரு விடுதலையை நோக்கி

பெற்ற சுதந்திரத்தை
பேணிக் காக்காமல்

பேன் மேயவிட்டு
பெரும் சுமையானதை
போராடி மீட்போம் வா…

வலிபட்டு
வலிபட்டே வாழ்பவர்கள்
வனமும்

வளமும் கொள்ளையாவதை
வலிமை கொண்டு கேளாமல்
மண்ணின் வளம்

மக்களாட்சி பெயரோடு
மார்பறுத்து புசிக்கும்
மடையர்களை

போராடி எதிர்ப்போம் வா…

அடிமைப்படுத்தி யவனையும்
அடிமைசங்கிலியையும்
அகிம்சை முறையில்

அறுத்தெரிந்து விட்டோம்
கைவிலங்கை
கைகளிலே விட்டதை கழற்றிட

போராடி உடைப்போம் வா...

வெள்ளையன் கொடுத்த
விடுதலை பெருமூச்சோடு
வீட்டை நோக்கியப் பயணம்

விடுதலை ஆண்டு 74 லிலும் என்
வீடு வந்து சேரவில்லை
என் நாடு
என் நிலம்

என் வீடு
என் உரிமை
என்றடைவது
எப்படி யடைவது

போராடி அடைவோம் வா...

ஐந்தாண்டுத் திட்டம்
ஐந்தாண்டுக்கொரு முறை
மனிதநேயத்திற்கும்

மனிதனுக்குமான ஒரு
மகத்தான திட்டமில்லை

போராடி பெறுவோம் வா...

கல்வி வளர்ச்சியும்
கலவி வளர்ச்சியும்
கலப்படப் பொருளாக்கி

விற்பனை செய்ததே
விடுதலை இந்தியாவின்
விஞ்ஞான வளர்ச்சியென்று

விளம்பரம் செய்வதில்
விடியலுமில்லை முடிவெதுமில்லை

போராடி கேட்போம் வா…

ஊழலின் வல்லமை
ஊழலிலே நிருபணம்
விடாக்கண்டன்

கொடாக்கண்டனின்
ஊழலின்
ஊற்றுக்கண்ணை

போராடி தோண்டுவோம் வா..

தனிமனிதப் பசியுணர்வை
தன்னிலை பொறுக்கா
தலைப்பாகை கவிஞன்

தலைக்கொட்டி கவிபாடினான்
பட்டினி சாவுகளோ_ரயில்
பாதை வழிகளில்
பட்டொளி வீசி பறப்பதை

போராடி தடுப்போம் வா…

மசக்கை வயிற்றை
மாதந்தோறும் தடவி _நிறை
மாதத்தை நித்தம் நோக்கி

மகிழ்ந்தவளின் பிள்ளைக்கு
பட்டுத்தொட்டில் இல்லையென்றாலும்
பாழும் குடிசையிலே பெற்றிருப்பதால்

பயணவழி பாதையிலே
பச்சிளம் சிசுவையீன்ற தாயொருத்தியின்
பாவக்கறையை
பாரத சாலைகளில்

போராடி துடைப்போம் வா…

தீண்டாமையற்ற நாட்டில்
தீண்டாமைச் சுவர்கட்டி
தீண்டாமை ஒழித்து

மதச்சார்பற்ற நாட்டில்
மசுதியை இடித்து
மதவாதம் ஒழிக்கும் இம்
மானிட ஜந்துக்களை

போராடி மறைப்போம் வா...

விலங்கைக் கொன்று
விலங்கு புசிப்பதில்லை
பறவையை கொன்று

பறவை புசிப்பதில்லை
மனிதனைக் கொன்று
மனிதன் புசித்து மகிழ்கிறான்

எச்சரிக்கை இது
ஏலியன்கள் வாழும் பகுதியென்று
எச்சரிக்கை பலகை

பறவைகளும்
விலங்குகளும் வைக்குமுன்
மனித இனத்தை

போராடி காப்போம் வா...

# வேண்டும்

வானத்து வின் மீனை
எண்ண வேண்டும் என்
வாழ்நாளில் இன்னும் கொஞ்சம்
நாள் வேண்டும்

வானவில்லில் நிறமொன்று
சேர்க்க வேண்டும் என்
வலிமையின் நிறமங்கே
சேர வேண்டும்

ஓவியத்தில் வலியொன்று
கூட வேண்டும் என்
உடற்குருதியால் அது
நிறைய வேண்டும்

மாளிகையின் மனிதனுக்கு
உரைக்க வேண்டும்
மண்குடிசை அரசனும் மனிதனாக
வாழ வேண்டும்

மனிதநேயம் இங்கு யின்னும்
மலர வேண்டும் அது
மழலை முதல் மங்கை வரை
காக்க வேண்டும்

தேரா மன்னனென்று
உரைக்க வேண்டும் அதை
தேசத்தில் ஆங்காங்கே
தெளிக்க வேண்டும்

அறம் சார்ந்த வாழ்வே
நிலைக்க வேண்டும் அது
அனைவருக்கும் சமமாய்
இருக்க வேண்டும்

வளர்பிறை நிலாவாய் வனம்
வளர வேண்டும் அதில்
தேய்பிறை நிலாவை போல்
வறுமை தொலைய வேண்டும்

உழைப்பே உயர்வென்று
சொல்ல வேண்டும்
ஊழ்வினைகள் அதனால்
உதிர வேண்டும்

பிணியில்லா பிறைபோல்
வளர வேண்டும்
பிணம் தின்னா பணமதை
வெறுக்க வேண்டும்

பொய் சொல்லி வாழ்வோர்
உணர வேண்டும்
பொய்மான் மறைந்திடுமென்ற
மதி வேண்டும்

கட்டாய தாய்க்கல்வி
இருக்க வேண்டும் அதற்கு
கட்டண விலக்கும்
தர வேண்டும்

துதிபாடா நிலையில்
வாழ வேண்டும் என்
தூய்மையில் வெண்மை கொஞ்சம்
சேர வேண்டும்

உற்ற மக்கள் அனைவரோடு
வாழ வேண்டும்

உயிர் பிரிந்தாலும் எனையங்கே
தேட வேண்டும்

# இறக்கமற்ற நாடு

சாக்கடையோர வீடு
சந்தடி நடைபாதை _கோணி
சாக்குகளால் தடுத்த அறை
வெயிலையும்
மழையையும் தடுக்க
தார்போட்ட ஓடு
கோழிகளும்
நாயும் தஞ்சம்
அடைந்தது போக
மிச்ச யிடத்தில்
மிகுதியான உறக்கம்
மழை வந்தாலும்
வெள்ளம் வந்தாலும்
அப்பப்ப
அரசாங்க கட்டிடம்
மாடி வீட்டு
மாதச்சம்பளம்
சீட்டு பணம் போக
கிழிந்த சீலை தைக்கவும்
சின்னவ கேட்ட
புத்தகமாவும் போனது
மளிகைக் கடை பாக்கியோ
மாத மாதம் சொல்லும்_அடுத்த
மாத தவணையில்
வானக்கூரையின் கீழ்
பூமிப்பரப்பின் மேல்
எப்பொழுதும்
நாட்டியமாடும்

குடிசை வாழ்க்கை
இப்பொழுது
இடித்து விட்டது அரசு
இடம் பொறம்போக் கென்று
இடம் மட்டுமா
இல்லை
இளக்காற மக்கள் நாங்களுமா?

# நினைவுகள் தந்த நிழல்கள்

வாழ்க்கையின் பாதையில்...
துன்பங்களும்
துயரங்களும்
மாறி மாறி
மனதை துளையிட்ட பொழுதெல்லாம்
ஆங்காங்கே
அமர்ந்து
இளைப்பாறவும்
களைப்பாறவும் உதவியது உன்
நினைவுகள் தந்த நிழல்கள் தான்

எத்தனையோ நாட்கள்
இத்தனை நிமிடங்களென்று
கறைந்தும்
கடந்தும் போனதுண்டு
நீயும் நானும்
நானும் நீயுமாய்
நடந்தாறிய பொழுதுகளில்

எனக்குள் நீயுமாய்
உனக்குள் நானுமாய்
என்று மாறிக்கொண்டோம்
எப்படி மாறிக்கொண்டோம்
நினைத்து பார்த்து
நினைத்து பார்த்து
நம்மை நாமே
தொலைத்துக்கொண்டோம்

காலத்திடம் கேட்டால் நம்
காதல் மட்டுமே சாட்சியென்றது

இடவலமாறிய பிம்பங்களாய்
நம் உருவத்தை
நமக்கே காட்டியதுண்டு
கண்ணாடிகள்
கூடுவிட்டுக் கூடுபாயும்
சிற்றின்ப உயிரினமாய்
நம்மை
நமக்கே அடையாளம்
காட்டியதுண்டு நம்
கண்கள்

அப்படி தான் ஒரு நாள்
கதிரறுத்த
கையருவால் உன்
கையருக்க
உதிர்ந்த ரத்தத்தோடு
ஓராயிரம் கண்ணீர் துளிகள் எனக்கு

ஏன்டா மாமா
இத்தனை கண்ணீர்
இந்த கருவாச்சியின் ரத்தத்திற்கா
இப்படித்தான்
வெள்ளந்தி சிரிப்போடு
வெகுவாய் ரசிப்பாய் என்
கண்ணீர் துளிகளை

மழைத் தூறல்களில்
நனைந்த படியும்
ரசித்த படியும்
கடந்த பொழுதில்
கூடுதல் அக்கறையோடும் ஒற்றை
குடையோடும் வந்து

கோபக்கனலாய்
கொதித்து நிற்பாய்

கொஞ்சும் என் புன்னகையில்
கோபத்தை புதைத்து விட்டு நெஞ்சில்
சாய்ந்து
கேட்பாய் என்
கோபத்தின் அருமருந்தாக உன்
புன்னகையை எப்படிடா
கண்டெடுத்தாய் என்று

ஒற்றை குடைக்குள்
ஈருடல்_ இருவருக்கும்
ஒற்றை வாழ்க்கை
இப்படியே போகனும் நம்
காதல் வாழ்க்கையென்று
அந்த மழை தூரலிலும் நீ விட்ட
கண்ணீர துளிகள்
என் நெஞ்சை சுட்டது

தூக்கமில்லா இரவுகளிலும்
தூங்க மறுத்த நாட்களிலும்
நினைவுகளில் நீயே வந்து
என் மடிமீது தூங்கடா
என் மன்னவா என்று தாலாட்டி
தூங்க வைத்ததுண்டு

சித்திரை தேரை
சிறுசு பெருசுவரை
வடம் பிடித்து இழுத்து
வலம் வந்து நிலை நிற்கும் நம்

ஊர்வலமோ அதன் பின் தான்
உலா வரும்
ஒவ்வோர் கடைகளிலும்
உனக்கு பிடித்தை நானும்

எனக்கு பிடித்ததை நீயும்
வம்பிழுத்து
வாங்கி கொள்வோம்

எனக்கு தெரியாமல்
என் பெயரை நெஞ்சில்
பச்சையாய்
பதிந்தாயென்று
பதறினேன் ஏன்டி
குட்டிமா
இப்படியென்றேன் உன்

குட்டிமாவின்
நினைவுகளில் மட்டுமல்ல
ரத்தத்திலும் உன்பெயரை
கேட்கத்தானென்றாய்

ஆடைக்குள் எல்லோரும்
அம்மண மனிதர்தானே மாமா உன்
பெயரும்
நினைவும் இல்லாமல் நானும்
இங்கு அப்படிதான் யென்றாய்

களத்துமேட்டில் ஒரு நாள் உன்
கால்தனில் தலை வைத்து
கதை கதையாய் பேசி
கடைசியாய் நான் பேச
மறுத்தாலென்று முடிப்பதற்குள்

என்
உதடுகளை பொத்தி
நீ விட்ட கண்ணீர்
நெற்றியை மட்டுமல்ல
நெஞ்சத்தையும் நனைத்தது

உன் நினைவுகளின்றி
உன் குரலின்றி

ஒரு வாழ்வென்றால் அன்று
நான்
பிணமடா மாமா என்றாய்

கைகோர்த்து உன்னோடு
கடந்த நாட்களில்
தடுமாறி
தடமாறி விழுந்து
கண்ணீர் விட்டு
காயம்பட்டு அழுத நேரங்களில்

உன்
நெஞ்சிலிட்டு
நேர்படுத்தி
நிறைவாய் செதுக்கி வைத்து
உன்
கருவிழியே நானடா
கண்ணீர் மட்டும் ஏனடா என்று
புன்னகையால் என்னை
புதப்பித்தாய்

விடிந்தது தெரியாமல்
உறங்கிய நாட்களில் உன்
கொலுசொலியோடு
குலவையொலியையும் கேட்டெழுந்தேன்

அர்ச்சனை பாதி
அக்கரை பாதியாய்
நெற்றி முத்தமிட்டு
தலைவருடி தட்டிக்கொடுத்ததுண்டு

இன்னும்
இன்னும்
எத்தனையோ நினைவுகள்
எனக்குள்ளே புதைந்திருக்கிறது

பெயரிடாத
புயலொன்று பெரும்
மழையோடும்
இடியோடும் வந்து
வாழ்விடத்தையும்
வாழ்வாதரத்தையும்
இடமாற்றி வைத்துப்போகும்
இனி இப்படி தான்
இருக்க வேண்டுமென்று

அப்படி தான்
ஆகிவிட்டோம் நீயும் நானும்
எத்தனை மையல் தூரம்
இடமாறி போனாயென்று
பல
பறவைகள் வந்து சொல்லியது
உன்
வாழ்விடத்தை

தற்செயலாகவோ
தவறுதலாகவோ
இத்தனையாண்டு வாழ்க்கையில்
சந்திக்க
நேர்ந்த வேளைகளில்
பல அடி தூரத்திலே
பார்க்க விரும்பாமலே
நம்மை நாமே கடந்து கொண்டோம்
தலைகுனிந்து

பார்வை மோதலில்
பாசமும் காதலும்
பழையபடி
பற்றிக்கொள்ளுமோ என்ற
பயத்திலே

வாலிபமும்
வாழ்க்கையும் தின்ற
மிச்சத்தோடு
மிச்ச மீதி நாட்களை உன்
நினைவுகள் தரும் நிழல்களில்
ஆங்காங்கே
களைப்பாறியும்
இளைப்பாறியும் நடக்கிறேன்

# கள்ளிச்செடியோரம்...

அரும்பு மீசை வளருமுன்
ஆசை தாடி வளர்த்து
இறைவன் தந்த
இளமையைத் தொலைத்ததும்
என் காதல் தான்

ஏட்டறிவுப் புகுமுன்
ஏழு பிறப்பு வாழ்வென்று
எட்டி வைத்த கால்களை
முடமாக்கி விட்டதும்
என் காதல் தான்

கண்களிலே பிறந்து
கண்களிலே வளர்ந்து
கண்களிலே வாழ்ந்து
கண்களாகவே மாறியவள்
கண்களை குருடாக்கியதும்
என் காதல் தான்

ரத்தத்தின் நிறமும்
ரத்தத்தின் வகுப்பும்
நானறியு முன்னே
ரத்தத்தில் கலந்து
ராத்திரி தூக்கத்தை இழக்க வைத்ததும்
என் காதல் தான்

பிஞ்சில் விதைத்தால்
பிழையாகிப் போகுமென்று
பருவத்தில் விதைத்து

பாழாகிப் போனதும்
என் காதல் தான்

கள்ளிச்
செடியோரம் விதைத்து
கள்ளிப்பாலுக்கு
உரமாகி போனதும்
என் காதல் தான்

ஓடைக்
கறையோரம்
ஒதுங்கி நின்ற
செடிகளோடு சிக்கிச்
சீரழிந்ததும்
என் காதல் தான்

வளர்பிறை
நிலாவாய் வளர்ந்து
தேய்பிறை
நிலாவோடு தேய்ந்து
அமாவாசையில்
தொலைந்துப் போனதும்
என் காதல் தான்

நீர் குளத்தில்
நீச்சல் பழகி
நீச்சலை மறந்து
சுழலில் சிக்கி
சூழ்நிலையால்
மறைந்து போனதும்
மறந்து போனதும்
என் காதல் தான்

அருகம் புல்லின்
பனித்துளியில்
அடைக்களம் தேடினாலும்

வெயிலின்
வேட்கையால் வெந்துப் போனதும்
என் காதல் தான்

மலரின் வாசம்
சுவாசிக்கச் சென்றால்
மரணத்தின் வாசலில்
மாலையாய் நின்றதும்
என் காதல் தான்

செவ்விதழ் ரோஜாக்களை
செழுமையாய் வளர்த்து
கை தழுவச் சென்றபோது
செங்கரையான் தின்றுத் தீர்த்ததும்
என் காதல் தான்

வாய்மொழி
வாக்கியத்தில் வளராமல்
வார்த்தைகள்
வாய்க்கரிசியாய் மாறிக்கொண்டதும்
என் காதல் தான்

ஆசைகள் அறுவடையாகி
வேஷங்கள் வீதியுலா வந்து
துயரங்கள் தோல்மீது அமர்ந்து
வேடிக்கை வாழ்க்கை
வாடிக்கையாகி போனதும்
என் காதல் தான்

சப்தஸ்வரங்கள்
சத்தமிட்டு பாடினாலும்
ஊமைக்குயிலின் ராகம்
முகாரி ராகமானதும்
என் காதல் தான்

நடை பாதைகள்
நந்தவனமாய் பூத்து நின்றாலும்

பாவப்பட்ட பிறவிக்கு
பாலைவனமாய் ஆகியதும்
என் காதலில் தான்

கோயிலின் தீர்த்தம்
புனிதமாகப் பட்டாலும்
பூத உடலிற்கு
பாவப்பட்ட நீரானதும்
என் காதலில் தான்

இறுதியாக ஒன்று
என்னை காதலித்த அவளுக்கு

உன்
மனதிற்கு பிடித்த
மலராய்
மனதெங்கும் நிறையா விட்டாலும்
உள்ளம் வெறுத்த
ஊமத்தை பூவாய் ஓரிடம் உன்
உள்ளத்தில் நின்றாலே
பாக்கியம்
என் காதலுக்கு

# குடியரசு பேருந்து

நாடெங்கும் கடை
வீடெங்கும் குடி
தெருவெங்கும்
தெருவிளையாடல்

அரசு பேருந்தும்
அரசின் போக்கும்
தட்டுத்தடுமாறும்
போதையின் பாதை

ஆற்றைக் கூவமாக்கி
அதனோரம் வீடுகட்டி
கூத்தடிக்கும் கரைவேட்டிக்கு
கூவத்தூர் தெரியுது
கூவம் தெரியலை

குடிக்க பழகி
கூவத்தூரில் ஆடினால்
கோட்டையில் உட்காரலாம் இது
நம்ம நாட்டு ஜோதிடம்

குடியும்
குடித்தனமாய் இருந்தால்
கூவத்தூரிலிருந்து
கோட்டைக்கு செல்லலாம்
இடர்பாடு ஏதுமில்லை
இடைநில்லா பேருந்திது
நம்புங்கள்
நம்ம “குடி”யரசு பேருந்தை

# கர்ம வீரருக்கோர் கடிதம்

கல்வி சாலையெங்கும்
கற்றவர்
கற்பவர்
கற்பிப்பவர் குரல்களில்

ஓங்கி
ஒலிக்கிறதையா உமது குரல்
கர்ம வீரனே
கறையாத

கறைபடாத குரலெல்லாம்
உமதையா
உமகெதற்கு
கடற்கரையில் ஓரிடம்

உள்ளமெங்கும் நிறைந்திருக்க
உமிழ்நீராய் நீயிருக்க
உடற்குருதி ஓடுகின்ற மானத்தமிழன்

உள்ளங்களில் மறையா குடியிருக்கும்
உமகெதற்கு
கடற்கரையில் ஓரிடம்

அறிவுச் சாலை யெங்கும்
அரைப்பசியில் வாடியிருக்க
அனனமிட்ட கையைய்யா உமது கை
ஆகாரமுண்டு

ஆண்டவனாய் கும்பிட்டு
ஆனந்த கண்களில் குடியிருக்கும்
உமகெதற்கு
கடற்கரையில் ஓரிடம்

விரு(ந்)துக்கே
விருந்து வைத்த
விருதுநகர் மைந்தனே தமிழன்
விண்ணைத்தொட்ட புகழெல்லாம்

உம்மிடம் மன்னவனே
உமகெதற்கு
கடற்கரையில் ஓரிடம்

கல்லா
நீர் பெற்ற புகழெல்லாம் உம்மால்
கற்று
புகழடைந்த யிடமெல்லாம் உமதையா

உமகெதற்கு
கடற்கரையில் ஓரிடம்
தரணியெங்கும்
தமிழனென்று

தலைவணங்க வைத்த மகானே
தலவரலாற்றில் இருக்கிறது உம்மிடம்
உமகெதற்கு
கடற்கரையில் ஓரிடம்

அமுதசுரபிகளாய்
அட்சய பாத்திரமாய்
அள்ளி
அள்ளி கொடுத்தாயே கல்வி சாலை

அத்தனை யிடமெல்லாம் உமதையா
உமகெதற்கு
கடற்கரையில் ஓரிடம்

எதிர்த்தவர்
ஏளனமாய் பேசினாலும்
எடுத்தெரிந்து பேசா
எளியவரே உமது

எளிமைக்கோர் இடமுண்டு
எம்மண்ணிலே அதை
எடுத்துச்செல்லோர்
எவருமில்லை

எம்மண்ணிலே
உமகெதற்கு
கடற்கரையில் ஓரிடம்

# வேர் விட்ட பூ

வேர் விட்ட பூ
இல்லை
இல்லை
வேரை வெட்டி
வேரிடத்தில்
வேரூன்றி என்னை
வெட்டி எருகாக்கி
வேர் விட்ட பூ...
என்
ஆயுளுக்குமான கண்ணீரை
அன்றே நான்
அழுது தீர்த்துக் கொண்டவன்
அவ்வப்பொழுது எழும்
ஆசைகளை கூட
கண்ணீர் வெப்பத்தில்
கரை சேர்த்துக் கொள்கிறேன்
எனையொட்டி வளர்ந்த ரோஜாச் செடி
எனக்காய் வளருதென்று
எண்ணியிருந்தேன்
யாரோ ஒருவரோடு
யசோதையாய் நீ நிற்க
யாசகம் கேட்டு நானெங்கு நிற்க
யாரிடமாவது சொல்லி யனுப்பு
மலர் உனக்கானது மில்லை
மலருக்கானவன் நீயுமில்லை யென்று

# என் தே(க)சம்

மங்கை யென்னை
மணவாளன்
மலடி யென்றுரைக்க
மாற்றொருவன் வந்து
மழலை பெற்று
மலடு நீங்கி
மனம்போல் வாழலாமெங்க
மறுப்பேதும் பேசாமல்
மானம் விட்டு
மாற்றானோடு சென்றேன்
மாதம் அறுபதாகியும்
மசக்கை யாகாதது.
முதல் கணவனே
முழுக்காரண மென்று
மூச்சுமுட்ட உரைக்கும்
முட்டாளுக்கு
முந்தானை விரித்த என் தேகம்
மூவுலக தீயில் எரிகிறது

# அதிகார (தற்)கொலைகள்

இரக்கமற்று கழுத்தை
இறுக்கிப் பிடித்த
இதயத்துடிப்பு மானிகளின்
அதிகார கொலைகள்

வளமானவனுக்கு
வளைந்து கொடுத்து
எளியவன் கழுத்தை
எட்டிப் பிடிக்கும்
இரக்கமற்ற
இதயத்துடிப்பு மானிகள்

மனசாட்சிகளும்
மருந்தியியல்களும்
மண்டியிட்டது இதயத்துடிப்பு
மானியிடம்
உயிர்களையும்
கனவுகளையும் காவு கேட்டு

தூக்கு கயிராய் மாறிய இதய
துடிப்பு மானிகளை
அச்சத்தோடும்
அருவருப்போடும்
கடந்து போகிறோம்

காலங்கள் மாற மாற
கரையான்களும்
காவுகேட்கிறது சனாதனத்தின்
கோரப்பிடியில்

அனிதாவில் தொடங்கி
மோதிலால் வரை

அறுவைச் சிகிச்சையிலும்
அவசர சிகிச்சையிலும்
மென்று முழுங்கும்
மெத்தனத்தின் அதிகாரம்

முசோலிகளும்
ஹிட்லர்களும்
அவ்வப்பொழுது
அவதரித்துக் கொண்டே இருக்கிறார்கள்

சாதியென்றும்
மதமென்றும்
மொழியென்றும்
இனமென்ற கோரப்பிடியில்

யூதப்பிணத்தின் மேல்நின்று
கொக்கரித்த ஹிட்லரை
படித்து முடிப்பதற்குள்
காட்சியும் தருகிறார்கள்
சனாதன போர்வையில்

பார்ப்பனரை தவிர யாரும்
படிக்க கூடாதென்ற
பரந்த மனப்பான்மையே
பாரதம் முழுக்க ஒரே தேர்வோ

தட்சணை யென்ற
ஏழைகளின் உயிரை கேட்டு
புதிய கல்விக் கொள்கை
புதைக்க வரும்
புதிய ஏற்பாடோ

எதிர் வீட்டு மரணம்
அடுத்த வீட்டு மரணம்

பக்கத்து வீட்டு மரணம்
வேடிக்கை பார்ப்பதே
வாடிக்கையானது நமக்கு

தோல்சீலை கூடாதென்றும்
மேலாடை கூடாதென்றும்
தொங்கும் மார்பை ரசித்து
மார்பின் அளவுக்கேற்ற
மார்வரி கேட்ட கூட்டம் தான்
மருத்துவத்திற்கு
மரணமென்ற வரிகேட்கிறது

கனவு கண்டால் வரி
கண்ணில் பட்டால் வரி
தொட்டதெல்லாம் வரி
தொட நினைத்தால் வரி
தொடையருகே ஒரு நாள்

ஆணின் விந்துக்கும்
பெண்ணின் விந்தக்கும் அளவுகோல்
வைத்து
வரிகேட்கும்
வாய்தா ஒன்று வரும் அது
வரை

சாதனத்தின்
காலடியில் நக்கி பிழைக்கும்
கூட்டமாய் விழுவதை கவ்வ
காத்திருப்போம்

மான உணர்ச்சிகளை
மார்வாடியிடம் வைத்து விட்டு
மாட்டின் பின்நின்று
மனிதநேயம் பேசிக்கொள்வோம்

# அதுவே எனக்கு போதுமடி

அழகுப்
பெண்ணே கேளடி_உன்னுள்
அடுக்கி வைத்த
பேரழகை பாரடி

பிரம்மனே
அறியாத சூத்திரமடி
ரவிவர்மன்
தீட்டாத ஓவியமடி _ நீ

பொய்கையிலே
பூக்காத பூவடி _ இந்த
பூமியே
காணாத புதுமையடி _ நீ

வலிக்காம
எடுத்த தேயிலையடி
வலிக்காம
மனசுக்குள் வந்தவளடி_ நீ

பனி மூட்டம்
உன்னழகை மூடுதடி
பாசத்திலே
உனையங்கே தேடுரேன்டி _ நான்

வட்டமிட்ட
மேக கூட்டம் வழியுதடி
வஞ்சியே
அதிலொருவன் நானடி

பாதச் செருப்பு
கட்டாயம் போட்டுடடி
பாதக் கொலுசில்
சேர்ந்ததென் கண்களடி

பருத்திப்பூ
வெடிச்சி யங்கே பறக்குதடி _ அதை
பட்டாம்பூச்சி
ஆடையாக்கி பறக்குதடி

நாள் பார்த்து
உலா வரும் அம்மன் தேரடி
நாளெல்லாம்
உலாவரும் என் அழகு தேரடி

மீன் விழியாள் _ உன்
பார்வை பட்டதடி _ அந்த
மின்னலுக்கே கண்
அழிந்து போனதடி

முக்குளித்து
நானெடுத்த முத்துக்களடி
முகமூடி
தினமங்கே சிரிக்குதடி

கனி ரசங்கள்
ஏக்கத்திலே துடிக்குதடி
கன்னியவள்
இதழ்பட ஏங்குதடி

வாள் கொண்ட
காயமெல்லாம் தோற்றதடி
வேல் விழியால் தந்த
காயமின்னும் மாறளடி

குறையில்லா
பிறை உன் நெற்றியடி

பிறைகண்ட
நிலவது ஓடி ஒளியுதடி

மலரெல்லாம்
வருடி போக வந்ததடி
மலர் கூந்தல்
கண்டதும் வாடிவிட்டதடி

தேயாத
பிறையழகு தேகமடி
தேடி நாளும்
அலைவது என் வேலையடி

அழகின்
சூத்திரத்தை தந்திடடி
யாவருக்கும்
தெரியாமல் காப்பேனடி

பிரம்மனுக்கு
நன்றியொன்று சொல்வேனடி _ என்
பிறப்புக்கு
அர்த்தமொன்று தந்தானடி

நூறு வருட
வாழ்வது வேண்டாமடி
நொடி
வாழ்வென்றாலும் உன் மடியடி
அதுவே எனக்கு போதுமடி

# என் ஜீவன் தேடும் உயிர்

விழி மோதி
விழுந்தவன் பூ
விழியாளால்
விதி வழியில் செல்லவா உன்
விழி வழியில் வரவா

கூந்தல் காட்டின் பின்னல்கள்
கூப்பிடுது என்னை
கூர் விழிப் பார்வையோ
கொத்திக் கொத்தி குதறுது

பாதம் பட்டு
பாவனையானது அகலிகை மட்டுமா
பார்வைப் பட்டு
பைத்தியமானேன் நானென்ன மட்டமா

உள்குங்குமம் எடுத்து
உன் நெற்றியில் வைத்ததில்
உனக்கு தெரியலையோ
உதிர்ந்த என் ரத்தத்துளிகளே
உனக்கு பொட்டானதென்று

தேர் கொடுத்த பாரிக்கு
தெரியவில்லை சேதி
முல்லைக்கொடியின் பூவெல்லாம் என்
மோக மங்கையின் கூந்தலுக்கென்று

குந்தி தேவி
கொடுத்து வைத்தவள்

கொடை வள்ளல் கர்ணனை
கொடையுலகிற்கு தந்ததில்

குறையேது மில்லாமல் என்
கொடி முல்லை படர
கொடுத்த எந்தன் உயிரும்
கொடுத்த எந்தன் உடலும்
கொடுத்ததில்
கொடுத்து வைத்தவன் நானே

சிறை பிடித்த சீதையும்
சிறை மீண்டால்
தீயிட்டு எரிந்து எண்ண
தீமையை அழித்தால்

தீராத என் காதல் தான்
சிறைப் பட்டு கிடந்தும்
சிரிக்க வைக்கிறது
தீராத என் காதல் பசியில்
தீயுமிங்கு குளிர்கிறது உன்னை
தேடியெங்கும் அலைகிறது
என் ஜீவன்.

# சிகப்பு ரோஜாக்கள்

கற்பின் கறையெல்லாம்
கரைந்து போகிறது
நிலா ஊர்வலத்தின்
நித்திய பிணவாடையில்

முந்தானைக்குள்
மூச்சு முட்டும் வலிகளும்
முடியாத ரனங்களும்
மூடிமறைத்தே இருக்கும்

அங்கத்தில் எங்கிலும்
இடைவெளி கண்டு
ஆசை கொண்டால்
சங்கமத்தில் கரைந்திடும்

நிலாக் கறைகள்
நித்தம் சலவை
நித்திரை தொலைத்த
நிர்வாண ராத்திரியில்

கசக்கி யெரிந்து
கருகி கிடக்கும்
மல்லிகை சொல்லும்
மங்கையின் மேனியை

விரக தாபத்தில்
விறகாய் எரிந்து
விடியலில் பறந்த
வெள்ளை சாம்பல்கள்

கைகோர்த்த நிலா பயணம்
காலிணைந்த சொர்க்க பயணம்
வியர்வை குளத்தில்
விடையில்லா தேடலில்

மார்பழுத்தும்
முனகல் சப்தம்
சில நேரம் வலிகளோடு
சில நேரம் ரனங்களோடு

கறையான் புற்றில்
புகலிடம் தேட
கத்திருட்டிலும்
தடமறிந்த தழுவல்

ஆசைக் கடியால்
அங்கத்தில் பதிய
மோக வாசலின்
முத்திரை பதிப்பு

உதட்டு பரிசம்
உடலெங்கும் பதிய
நரம்புக்கூட்டம்
நங்கூரமிடும்

வெட்க ஆடை
விலகி நிற்க
மோகப் போர்வை
முகம் வரை போர்த்திடும்

மிருகத்தில் மனிதனும்
மனிதத்தின் மிருகத்தையும்
இருண்ட வாழ்வில்
இனங்காண முடியவில்லை

கடிவாளமில்லா
குதிரைக்கு

தீனி போடும்
தீவன கூடத்தில்

நசுக்கி எறிந்த
கரும்பு சக்கை
நாளும் துளிர்விட்டு
நாணிநிற்கும்

கவ்வி தின்ற நாய்க்கு
கறியேதும் கிடைக்காமல்
வெம்பிச் சென்றது
விடியலில்

எச்சில் தொட்டிலில்
அமிர்தம் உண்ணும்
விட்டில் பூச்சிகள்
விடியலில் காணவில்லை

சதை உலாவும்
சரணாலயத்தில்
வந்து போகும் பலவித
வக்கிரப் பறவைகள்

கொத்தித் தேடி
குதறி திண்றது
ரத்தம் வழிந்த
காயம்பட்ட காயத்தையே

மிருகத்தை வேறுபடுத்த
மனித யினம் _ மனிதத்தில்
மிருகத்தை வேறுபடுத்தும்
என்னினம்

விடியலை நோக்கிய
பயணத்தில் எல்லோரும்
விடியாத இரவை நோக்கிய
பயணத்தில் எம்மினத்தோர்

# புதிய இந்தியா புரியாத இந்தியா

படிப்பேன் படிப்பேன்
பள்ளி சென்று படிப்பேன்
பட்டம் பெற படிப்பேன்
பக்கோடா விற்க படிப்பேன்
பாரதம் காக்க படிப்பேன்
பக்கோடா விற்று
பாரதம் காப்பேன்

விவசாயம் செய்வேன்
விளைந்த நிலம் வீடானாலும்
விளைந்த பொருள் வீணானாலும்
விவசாயம் செய்வேன்
விவசாய பொருளுக்கான
விலையை அரசியல்
விஞ்ஞானிகளிடம் கேட்டு நிற்பேன்

பெண்மையைக் காப்பேன்
பெண்ணினம் காப்பேன்
படித்தவள் என்றாலும்
பாவப்பட்டவள் என்றாலும்
குழந்தை யானாலும்
குமரி யானாலும் பழைய
கிழவி யானாலும் கற்பழித்து
பெண்ணினம் காப்பேன்

சந்திராயன் 2ஐ
நிலாவில்
நிலை நிறுத்துவேன்_ மனித
சாக்கடை அள்ள

சக மனிதனையே பயன்படுத்துவேன்
சாக்கடை அள்ளி
சாப்பிடுபவன் என்று
ஏளனமாய் பேசுவேன்

ஒரே நாடு
ஒரே வரி
உழைப்பவன்
வியர்வைக்கும் வரிபோடுவேன்
ஊரில்
பிறந்தாலும் வரிபோடுவேன்
பசித்தவனுக்கும் வரிபோடுவேன்
பாவப்பட்டவனுக்கும் வரிபோடுவேன்
நாட்டுவரிகளை
நாலுபேர்க்கு பங்கிடுவேன்
நாட்டுமக்களை
நடுவீதியில் நிறுத்துவேன்

ஓட்டு போடுவேன்
கைநாட்டுக் கெல்லாம் ஓட்டு போடுவேன்
கைக்கூலிக் கெல்லாம் ஓட்டு போடுவேன்
கருப்புப் பணம்
வெள்ளையாக ஓட்டு போடுவேன்
கல்வி கற்றவரெல்லாம்
கையேந்தி பிச்சை யெடுக்க
ஓட்டு போடுவேன்

மக்களுக்காக திட்டமிடுவேன்
மக்கள் போராடினால் அந்த
மக்களைக் கொன்று
மனித நேயத்தையும் கொன்று
மக்களுக்காக திட்டமிடுவேன்

குடி குடியை கெடுக்கும்
குடிக்கும் புட்டிகளை
குடியரசாய் விற்பேன்

குடிக்கும் திட்டத்தின் கீழ்
அரசாணைகளில்
அதிக புட்டி விற்க
ஆணையிடுவேன்
குடி குடியை கெடுத்தாலும்

கல்வி வளர்ப்பேன் புதிய
கல்விக் கொள்கையில்
புத்தி வராமலிருக்க
கல்வி வளர்ப்பேன்
ஆண்டுக்கொரு தேர்வு வைத்து
அங்கு கொஞ்சம்
இங்கு கொஞ்சம் கழித்து
மிச்ச மீதி மக்களுக்கு
புத்தி வராமலிருக்க
புதிய கல்வி வளர்ப்பேன்

இல்லாதவனை
இல்லாதவனாக வைப்பேன்
நீண்டு படித்தால்
நீட் வைப்பேன்
நீட் எழுத வந்தால் அரை
நிர்வாணமாக ரசிப்பேன்
வேலிக்கு மேல்
வேலி வைத்து கட்டமைப்பேன்
வேலியை தாண்டி
வேலை கேட்டால்
கேட் வைப்பேன்

வாகனங்களுக்கு
வரி விதிப்பேன்
வாகனங்களின் வழி பாதைக்கும்
வரி விதிப்பேன்
வழி பாதையெங்கும்
வழிபறி செய்வேன்
வரும்போதும்

போகும்போதும் வழிப்பாதை
வரியென்று
வழிபறி செய்வேன்

ஒற்றை வழிச் சாலையை
ஒழுங்கு பண்ண மாட்டேன்
எட்டு வழிச் சாலைக்கு
எட்டி எட்டி உதைப்பேன்
ஏருழுத வயலி லெல்லாம்
எல்லைக்கல் நட்டு வைப்பேன்
ஏழை மக்களுணவில் கொஞ்சம்
எச்சிலை துப்பி வைப்பேன்

கண்டம் விட்டு கண்டம்
கடவுளை கடத்துவேன் அந்த
கடவுளையே குற்றம் சொன்னால்
கண்டபடி திட்டிடுவேன் கடத்திய
கடவுளையே கண்டுபிடித்தால் அந்த
கயவர் முகத்தில்
காரி உமிழ்ந்து வைப்பேன்

படிப்பேன் படிப்பேன்
பட்டம் பெற படிப்பேன்
பக்கோடா விற்க படிப்பேன்
பாரதம் காக்க படிப்பேன்
பலரை பாடையேற்ற படிப்பேன்
பைத்தியமாக படிப்பேன்
பைத்தியக்காரனாக படிப்பேன்
பைத்தியம் பிடிக்கவே படிப்பேன்

# வினோதம்

இந்திய
மனநோயாளியின்
கற்களும்
செருப்புகளும் _ ஏனோ
மாமேதையின்
சிலையை நோக்கியே
செல்கிறது

# சிரிப்பும் செழிப்பும்

மது அறவே கூடாதென்ற
மகாத்மா காந்தி
மதுக்கடை கல்லாவில்
சிரித்துக் கொண்டு தான்
இருக்கிறார்
மதுக்கடை கல்லாவும்
மகாத்மாவின் சிரிப்பும் _ என்
மாநிலத்தின் செழிப்பு

# அறியாமை

மண்ணை பக்குவப்படுத்தி
விதை போட தெரிந்த
மனிதனுக்கு
மனச பக்குவப்படுத்தி
வாழத்தெரியாம போவது
அறியாமையே

# கடினம்

வாழ்க்கையில்
வாழ்வது
எளிது _ ஆனால்
வாழ்க்கை என்னவென்று
அறிந்து _ அதை
வாழ்ந்து விட்டுப் போவதே_ இங்கு
கடினம்

## எது தீட்டு

ஐயிரண்டு மாதம்
அன்னையவள் கற்ப குளத்தில்
அழகாய் வளர்ந்து
ஆனந்த கூத்தாடி
அங்கம் மகிழ்ந்தவன்
ஆச்சாரக் குளத்திற்கு
வந்ததும் _ அந்த குளம்
தீட்டென்றான்

# மை

சுதந்திர நாட்டின்
அடிமைகளை
ஐந்தாண்டுக் கொருமுறை
அடையாளம் காணவே
தேர்தல் மை

# விருந்தாளி

குடிசையை தேடி வரும்
மாடி வீட்டு விருந்தாளி
வழியும் பாசத்தோடு
வாக்கு கேட்கும் விருந்தாளி
தேர்தலுக்கு மட்டும்
தேடி வரும் விருந்தாளி
சாதி பார்க்காத
சமத்துவ விருந்தாளி
மதம் பார்க்காத
மகத்தான விருந்தாளி
விரலில் மை வைத்து
திரும்பி பார்த்தால்
காணாமல் போன விருந்தாளி

## ஊழல்

அலைக்கற்றை
ஒதுக்கீட்டில் ஊழலாம்
தேர்தல் தோறும்
வாக்குறுதி திருடிய
காற்றின் ஊழலை விடவா?

# மாறாதது

ஏழை வீட்டின்
குடிசை விளக்கு
என்றும் மாறாது
மண்ணை பொன்னாக்கும்
மகத்தான திட்டம்
ஆண்டுதோறும்
இதுவும் மாறாது

## தேச பக்தனின் குமுறல்

விரைவு ரயில் திட்டம்
விரைந்து வருகிறது
கொஞ்சம்
தள்ளி படு
விரைந்து செல்லட்டும்_ நம்
வீட்டை தாண்டி

# முரண்பாடு

நாம் எப்போதும்
நம்மை சுற்றி
நல்லவர்களையே
தேடுகிறோம்
நம்மை
தேடி வருபவர்களுக்கு
நாம் என்றுமே
நல்லவர்களாய்
இருப்பதேயில்லை

# வெறுக்கிறேன்

நான்
எப்பொழுதும்
வெறுக்கிறேன்
துக்க வீட்டின்
பசியை

# அமாவாசை

சலவைக்கு சென்ற
சந்திரன் _ அதனால் தான்
இங்கொரு நாள்
அமாவாசை

# இயற்கை

மலைகள்
துப்பிய
எச்சில் அருவியை
குடித்து
குளிர்ந்த சோலைகள்

# ஒத்திகை

பின்னாளின்
பிரிவுக்கு ஒத்திகை
பார்த்துக் கொண்டேன்
விடுதியில் தங்கி
வேலைக்குச் செல்லும் மகளிடம்

# நிலாப்பெண்

நட்சத்திர பூக்கள்
நாளும் பூத்துக் கிடக்கிறது
பூச்சூட
மறந்து போனால்
நிலாப்பெண்

# அடிக்கல்

அம்மிக் கல்லும்
ஆட்டுக் கல்லும்
ஆடிக் காற்றில்
பறந்திடுச்சி
பறக்கவே யில்லை
நட்டு வச்ச
அடிக்கல்

## சுமை

ஏ... சனநாயகமே
நத்தைக் கூட்டின்
பயணங்கள் நிற்கப் போவதில்லை
உன்
பெட்ரோல் விலை உயர்வால்
பொதி சுமக்கும்
கழுதைக்கு
சுமையொன்றும் புதிதல்ல

# கண்ணீர்

வெயிலில் வரும்
மழை போல்
அவள்
சந்தோச நினைவில்
ஓர் துளி கண்ணீர்

# திருட்டுத்தனம்

அடிக்கடி
எட்டிப் பார்க்க தோன்றுகிறது
எங்கோ ஒரு மூலையில்
ஒளிந்து கிடக்கும் அவள்
நினைவுகளை

# கழிவுநீர் பூக்கள்

உழைப்பின்
வியர்வை குளியல்
எனக்கேன் _ ஊர்
கழிவில் தந்தான்
கடவுள்

காற்றில் மாசென்று
கழிவின் விஷவாயுவை
சுவாசி என்றானே ஏன்

பிறப்பொக்கும்
எல்லா உயிர்களுக்கும்
இங்கு பொய்தானே

வயிற்றுப்பசி தீர்க்க
சிலரின்
வயிற்றுக் கழிவை
கழுவி பசியாறுகிறேன்

முகம் பொத்திச் செல்லும்
மனிதர்களுக்கு
தெரியப்போவதில்லை

பிறர் கழிவில்
என்றும் நான் முகம்
சுளித்ததில்லை என்று

எனக்கும்
வாழ்வு வருமென்றே

இறுதி மூச்சை
இறுக்கிப் பிடித்து

இறங்கி வேலை செய்கிறேன்
சில நேரம்
இறந்தும் போகிறேன்

விஞ்ஞான வான்
ஊர்திகள் _ ஏனோ
கறைபடிந்த என் முகத்தை
காணாமல் செல்கிறது

தன் கழிவை சுத்தப்படுத்தி
தானே அருந்தும்_ விண்கல
மனிதனைப்போல்
மண்ணுலகில் ஒரு
மாற்றம் வராதோ

கழிவை சுமக்கும் முகத்தையும்
கபடமற்ற சிரிப்பையும்
அப்பொழுதாவது
கண்டு கொள்வாரோ
இம்மனிதர்கள்

மனித சமுதாயத்தின்
எச்சில்கள் பெரும்பாலும்
என் வீட்டு உணவு
தட்டுகளில் விழுகிறது

பள்ளிக் குழந்தையின்
பாடங்கள் என்
பயணங்களோடு தொடங்கி என்
பயணத்திலே முடிகிறது

முத்தை தேடி மூழ்க
முக கவசமுண்டு

மூத்திர சட்டியில் இறங்க
முழம் கயிறே கவசம்

செய்வினைகள் ஏதுமில்லை
ஊழ்வினைகள் வந்து சேர
செஞ்சோற்று கடன் தீர
சேற்றுக்குள் தேடல்

வர்ணத்தில் மனிதனை
வகை படுத்தியவன்
மனித கழிவை வகைப்படுத்த
மறந்ததேனோ

எல்லா கழிவுகளும்
என்னிடமே சேருகிறது
கடவுளின் கழிவுகள்
யாரிடம் சேர்கிறது

கூச்சத்தை விட்டே
குழிக்குள் இறங்குகிறேன்
கழிவை
கொடுத்த மனிதனோ
கொஞ்சம் தள்ளி நடக்கிறான்

நாலு வகை வண்ணம் பூசிய
நரைச்ச முடியை
நறுக்கியப் பின்
ச்சீ.... என்கிறார்கள்

ச்சீ.. ச்சீ யென்று
ஒதுக்கியதை _ என்
சிரசில் ஏந்தி
சீர்படுத்துகிறேன்

மலையோடும்
காடோடும்
வயலோடும்

மணலோடும்
கடலோடும்

வாழ்ந்தவன் தன்னை
வருத்தி வாழ்ந்தான்
தன்னினத்தை
காத்தே வாழ்ந்தான்

நாகரிக கோமாளியாய்
நல்வேஷ மிட்டு
நன்னிலமும் பாழானது
நல்மனிதனும் பாழானான்

கோப்பை நீரில் மிதக்கும்
குளிர்பான கட்டியை
குடித்து மகிழும்
மனித இனத்திற்கு

துப்பிச் சென்ற
எச்சில் திவலைகளை
சுத்தம் செய்யும் _ நாங்கள்
நாய்கள் கூட்டம் தான்

# கொதிந்தெழுப் பெண்ணே

கொதிந்தெழுப் பெண்ணே
கொதிந்தெழு _உன்
கொஞ்சம் வாழ்வை
மகிழ்வா வாழ
கொடுமைக்கார கணவன்
கொடுக்கும் வாழ்வில் _உன்
கொஞ்சம் வாழ்வை
மகிழ்வா வாழ
கொதிந்தெழுப் பெண்ணே
கொதிந்தெழு

வீட்டுக்குள்ளே பெண்ணை
பூட்டிவைக்க
வீதியுலா வரும்
கொடுமையைக் கண்டு_அதை
வேறு வழியில்
திசை திருப்பிட
கொதிந்தெழுப் பெண்ணே
கொதிந்தெழு

சட்டத்தை மீறி
சட்டையை பிடிக்கிறான்
நீதியை மீறி
நிர்வாணப் படுத்துறான்
கோயிலினுள்ளே அலங்
கோலமாக்கிறான்
கொதிந்தெழுப் பெண்ணே
கொதிந்தெழு

அங்கொன்றும் இங்கொன்றுமாய்
அவல அலை அடிக்குதடி
அடிக்காதே அண்ணா அடிக்காதே
ஆடை கழற்றுகிறேன்
அய்யோ அம்மா…
அலறல் யின்னும் கேட்குதடி
அடங்கிப் போவதா _ உன்
உணர்வும் உணர்ச்சியும்
கொதிந்தெழுப் பெண்ணே
கொதிந்தெழு

நச்சுக் கக்கும் நாகத்திற்கு
பிஞ்செது
காயெது
பழமெது அறியாமல்
அலையுதடி யிங்கு
அதையறிந்து அழித்திட
கொதிந்தெழுப் பெண்ணே
கொதிந்தெழு

குருதிக் குடிக்கும்
குள்ளநரி கூட்டம்
கூடி அலையுதடி _ அது
சாதியென்றும்
மதமென்றும்
மொழியென்றும்
வேஷம் கட்டி வருதடி _ அதன்
வேஷம் கலைக்க _ உன்
வேஷம் கலைத்து
கொதிந்தெழுப் பெண்ணே
கொதிந்தெழு

சுற்றி நிற்குது
சூழ்ச்சிகளடி உன்
சுதந்திரம் அங்கே
பறி போகுதடி _அந்த

சுழலில் சிக்காமல் நீயிருக்க
கொதிந்தெழுப் பெண்ணே
கொதிந்தெழு

எந்த அறிவிலும்
இளப்பிள்ளை நீ யில்லையென்று
எல்லை கடந்து
சொல்லிடடி
எடுப்பார் கைப்பிள்ளை
என்போரைக் கண்டு
கொதிந்தெழுப் பெண்ணே
கொதிந்தெழு

படிதாண்டினால்
பத்தினி யில்லையெனற
பகட்டு வார்த்தை மீண்டும்
பரவுதடி அந்த
பகுமான மனிதனுக்கு
பாடம் புகட்டிட
கொதிந்தெழுப் பெண்ணே
கொதிந்தெழு

அத்தனை பணியிலும்
தடம் பதிததாய்
அறிவால் அங்கே
நிலைத்து நின்றாய்
அதனால் சொன்னான் ஒருவனடி
வேலைக்குச் செல்பவள்
வேசியென்று _அந்த
விலங்கு மனிதருக்கு
விளக்கிட
கொதிந்தெழுப் பெண்ணே
கொதிந்தெழு

# இடுகாட்டு அலறல்கள்

எரித்த காடே
எரிக்கும் காடே
எரிக்கின்ற காடே
எரியும் காடே

ஈசன் வாழும் இடுகாடே
ஈவு இறக்கமில்லையா
ஈக்கள் மொய்த்த பண்டமாய்
இடுகாட்டுப் பிணங்கள்

காப்புக் காலங்களில்
கனிந்து தொங்கும் பழமாய்
சேர்ந்து கிடக்கும் பிணங்கள்
செத்து மடியும் காலமிதுவோ

எத்தனை நாள் பசி
எப்போ அடங்கும் பசி
எதனால் அடங்கும் பசி
எப்படி தான் நிறையும் பசி

ஈசனே !
எட்டுத்திக்கும்
கேட்குதையா எங்கள்
அவலக்குரல்
இருக்கும் திசையை
சொல்லி அனுப்பு _ உயிரோடு
இருந்தால் அனுப்புகிறோம்
சேதி

படுக்கையில் இறந்தோம்
பாதையில் இறந்தோம்
பசியால் இறந்தோம்
பட்டினியில் இறந்தோம்

நோய் வந்து இறக்க
நோன்பா இருந்தோம்
சுவாசப் பையை நிறைக்குதையா
சுடுகாட்டுப் புகை

சிறுமை பட்ட வாழ்விலும்
சிதைக்கப்பட்ட வாழ்விலும்
சிதையாத உடல்
சிதைமூண்டதீயில் எரியுதையா

பசி பொறுக்கா வாழ்வில்
ருசி கேட்டு நின்றதில்லை
நெஞ்சக் கூட்டை எரிப்பதற்கு
நெடுநாள் தவமோ

எட்டாத உறவும்
ஒட்டாத உறவும்
தீண்டதகும் உடலும்
தீண்டதகா உடலும்

ஒன்றாக எரிந்து
ஓங்கி ஒலிக்கிறது
எக்காலம் இட்டாலும்
இக்காலமே நிறைவென்று

எரிகின்ற உடலில்
எதை உயர்வென்க
எதை தாழ்வென்க
எல்லாமே சமமென்கிறது நெருப்பு

பந்தி வைத்த விருந்தாக
படையலில் வைத்த உணவாக

பத்தி எரியுதையா_ உன்
பக்தியின் புத்திமான்

நேர்த்திக் கடன் தீர்க்க
நெடுந்தூரம் சென்றிருக்கேன்
நெருப்புக் கடன் தீர்க்க
நெடுந்தூரம் படுத்திருக்கோம்

பச்சை ஓலை படுக்கையில்லை
பார்த்தழ சொந்தமில்லை
பால் குடம் தூக்கவில்லை
பன்னீர் தெளிக்கவில்லை

பத்தி எரியுதையா என்
பந்தமுள்ள கூட்டம்
செத்து எரியுதையா என்
சேனப்பால் கூட்டம்

எரித்த பிணத்தின் மேல்
எத்தனை பிணம் வைத்து
எரிப்பாய் உடலை
எத்தனை முறைதான் சிதைப்பாய்

இருக்க
இடம் தந்தில்லை
படுக்கை
பாயும் தந்ததில்லை
பசிக்கு
உணவும் தந்ததில்லை
வாழ
வழியும் சொன்னதில்லை
எரிக்க
இடமும் இல்லையென்றால்

ஈசனே
இனியொரு பிறப்பு வேண்டாம்
இந்த தேசத்தில்

பிணத்தை சுற்றிய கழுகுகளுக்கு
இரை தந்து வாழும் காக்கை கூட்டமாய்
இனியொரு பிறப்பு வேண்டாம்
இந்த தேசத்தில்

# என்னால் ஒருவன்

என் ரத்தம்
என் சதை
என் உயிர்
என் ஜீவனை
கிள்ளி எடுத்து
தள்ளி வைத்தப் பார்த்தேன்
மகனென்று சொல்கிறது _ என்னை
மலைக்க வைக்கிறது

செல்லரிக்கும் உடலிது
செல்லால் ஆனதிது _ என்
செல்லப் பிள்ளை உனக்கு
சேர்த்து வைத்து தந்ததிது

என்ன தந்தாய் எனக்கு
எனக் கேட்கும் பிள்ளையிடம்
என்னையே தந்தேன் என்பதை
எப்படி சொல்லி புரிய வைப்பேன்

என் காலம் வேறு
உன் காலம் வேறு
என் உரைக்கும் மகனுக்கு

எந்த காலமென்றாலும்
நீ எனக்கு மகனடா
நான் உனக்கு அப்பனடா

நீ பிறக்க
நான் பிறந்தேன் அப்பாவாக

அதனால
நீயுமென் அப்பனடா

பேசு பேசு என
பிறைநிலவை
கொஞ்சியும்
கெஞ்சியும் கேட்டேன்

இப்போ
பேசுவதை கேட்டு
பேதலித்து நிற்கிறேன்

அறிவுக்கு நான் சாட்சி
அன்புக்கு அவள் சாட்சி
அத்தனைக்கும் சாட்சியாய்
கண்முன்னே நடக்கிறது_ மகனின்
கண்காட்சி

கோகுலத்து கண்ணனுக்கு
குறும்புக்கு பஞ்சமில்லை
வெண்ணையை திருடி
வீதியில் ஓடினாலும்
வித்தார சிரிப்புக்கும் பஞ்சமில்லை

பேச கற்றுக் கொடுத்தவனுக்கு
பேச்சு வரவில்லை
பெற்ற பிள்ளை
பேசும் பேச்சில்

தாய் மடியில் தவழ்ந்ததையும்
தலைவருடிய தாயையும்
தமையனே உன்னால்
தடம் கண்டு கொண்டேன்

விதையே
விதையே என்
விந்திலெழுந்த

விழுதே_ என்னை
வியக்க வைத்த
விருட்சமே

கற்பாய்
கற்பாய்
கனிதமிழை
காணும் உலகில் _ நீயோ
தனித்துயர்ந்து
நிற்பாய்

தளிர்ந்த உன் காலால்
தண்ணீர் குடம் உடைத்து
தரணியில் வந்தவனே

தடித்த உன் காலால்
தடைகளை உடைத்து
தரணியாள எழ எம்மாத்திரம்

எழுத்தாணி எடுத்து
எழுந்தவன் தமிழன்
ஏடெடுத்து
எழுந்தவன் தமிழன்
ஏரெடுத்து உழுது
எழுந்தவன் தமிழன்

எழுவாய்
எழுவாய் _ மகனே
விண்மீனாய் உயர
விண்ணைத்தொட
எழுவாய்

# கற்ப பைகள் விற்பனைக்கு

இருண்ட உலகின்
இருட்டறையில்
சதை பிணத்தின்
சதையோடு விளையாடி
உடலை கிழித்து
உள் நுழைந்தவனுக்கும்
பிணத்தில் சுகம் காணும்
பித்தனுக்கும் தெரியவில்லை

மனதிற்கு பிடித்த
மந்திர காதலில்
மதி மயங்கி
மனதோடு மனதுரசி
மகிழும் கலை

சாதிக்கு
சதையும் இரையாகி விட்டது
சாதித்து
சந்தோஷ மடைவது ஒரு வகை
சாதனையில்
சந்தோஷ மடைவது ஒரு வகை
சதையில்
சாதி தேடுவது இது எந்த வகை

கதவடைத்து
காத்திருக்கும்
கயவர்களுக்கு தெரிவதில்லை
காம சுகம்

கட்டிலிலும்
கட்டுப்பாட்டிலும் மலராதென்று

நடக்க நாதியற்று
கடக்க முயன்ற போது
கை கொடுத்த கையிடமும்
மானத்தை
மறைத்த ஆடையிடம்
மதியிருந்தும்
காம
தாகத்தை தீர்க்க
தாசியிடம் சென்றபோதும்
உயிரை காக்க
உலகெங்கும் தேடிய ரத்தத்திடமும்
நாவின் ருசிக்கு
உண்ட உணவுவிடமும்
உப்பிடமும் கேட்பதுவுமில்லை
சாதிய விந்தை தேடுவதுமில்லை

சரீர கழிவுகள்
சாக்கடையாய் மாறியதில்
சாதிய சாக்கடை யென்றும்
சுற்றி வந்த காற்றை
சுவாசிக்கு முன்னும்
நோய்க்கு
நோம்பிட்டு உண்ட மருந்திடமும்
பூத உடலை
எரித்த கையிடமும்
புதைத்த கையிடமும்
சாதிய விந்தை தேடுவதுமில்லை
கருமம்
காதலில் மட்டும்
காலங்காலமாய்
கறைபட்டு போய்விட்டது
கற்பபைகளின் விற்பனை

சாதிய விந்துக்களுக்கு மட்டுமே
சலுகை விலையில் விற்பனைக்கென்று

திலகவதிகள்
திரும்பி யிருக்களாம்
இளைய நிலாக்கள்
விலகி யிருக்கலாம்
கவிதாக்கள் யின்னும்
கர்வத்தோடு யிருக்கிறார்கள்
கர்ச்சனையோடும் கேட்கிறார்கள்

சாதிய விந்துக்களுக்கு
சலுகை விலையில் விற்க
நானென்ன தேவதாசியா
என் விருப்பத்திற்கு மாறாக
என் விந்தை விற்றால் நீர்
என் அ……வா? மா…….வா?

# அகதியான என் மொழி

கடை கோடி கிராமத்தின்
கரும்புச்சோலை வேயப்பட்ட
கட்டந்தரை வீட்டில் பெயருக்கு
கட்டிலில் இறுமிக்கொண்டிருக்கிறார்
என் தாத்தா
தந்தையிடம் கேட்டேன்
தாத்தாவிற்கு மருந்துகள்
தரக்கூடாதா யென்று

நல்ல ரத்தங்கள் இல்லா உடல்
நரம்புகள் தோய்ந்த உருவம்
எலும்புகள் தேய்ந்த நிலை
எதையும் செரிக்காத உறுப்புகள்

மருந்துகளால்
மாற்றம் வாராது தாத்தாவிற்கு
மறுத்து சொன்னார் தந்தை

அதே
அதே நிலை தான்
என் தமிழுக்கும்

மாட்டுக் கொட்டகையின்
மண் சுவற்றில்
செல்லறித்து கிடக்கிறது
அரிச்சுவடியும் புதிய
ஆத்திசூடியும்

அ. … அம்மா
ஆ….ஆடு
இ….இலை
ஈ…. ஈசல்…..
இப்படியான தமிழிங்கே
இறந்து கொண்டிருக்கிறது

பல நூற்றாண்டுக்கு முன்
பயின்ற தமிழுக்கு நன்றி சொல்ல
ஜி.யூ.போப்பும்
ஜோசப் பெஸ்கியும்

உலக பொதுமுறையையும் தமிழின்
உன்னத இலக்கியங்களையும்
அன்னிய மொழிபடுத்தி
அறிந்திடு தமிழ் என்றனர்

ஆதி மனிதனிடம்
அன்றே மொட்டிட்டு
ஆயிரம் இரண்டில்
அம்மலர்

பூத்துக் குலுங்கியது
முதுமொழி மலராய்
செம்மொழி மலராய்
பூத்துக் குலுங்கியது

கல்விச் சாலையில்
காசுக்கான வியாபாரத்தில
காணவில்லை
தெள்ளமுது தேன் தமிழை

பழையன கழித்தலும்
புதியென புகுத்தலும்
போகியில் மட்டுமல்ல என்
பொதிகை தமிழும் தான்

முதுமக்கள் தாழி போற்றப்படுகிறது
முதுமொழி தமிழோ தூற்றப்படுகிறது

வேற்று மொழி இலக்கியம்
தமிழ் பேசுகிறது _ செம்மொழி
ஜி.யூ.போப்பாலும்
ஜோசப் பெஸ்கியாலும்

தமிழின் காரம்
தமிழின் சுவை
தமிழின் உணர்வு
தமிழனின் உணர்ச்சிகள்

அத்தனையும்
மறந்து விட்டது
மறக்கடிக்கப்பட்டு விட்டது
தமிழனின் உணவுகளில்

பச்சயாக சொல்கிறேன்
என்
தாய்ப்பாலை உண்டபொழுது
சுவை தெரியவில்லை
சூடு தெரியவில்லை
உணர்வு தெரியவில்லை
உன்னதமும் தெரியவில்லை

உண்ட அப்பொழுதும்
உடற்குருதியாய் ஓடுகின்ற இப்பொழுதும்
அப்படித்தான் ஆகிவிட்டது
என் செம்மொழி

முந்திப்பிறந்தவனால் பேச்செழுந்து
பிந்திப்பிறந்தவனால்
பிதற்றி வைத்து
பிழையாகிப்போனது

தமிழின் எச்சத்தில்
பிறந்த காக்கை கூட்டம்
கொச்சைப்படுத்தி
பார்க்கிறது தமிழை

தாய் வயிற்றில் பிறந்து
தாயையே ஏசியுரைக்கும்
தமிழ் பெற்ற பிள்ளைகளே
கேளுங்கள்

வஞ்சிக்கப்படுவதால் தமிழ்
வாழ்விழந்து போவதில்லை
எஞ்சி நிற்பவனின் குரலில் மித
மிஞ்சியே நிற்கும் என்
செம்மொழியான தமிழ்

# ஓடி விளையாடதே பாப்பா

ஓடி விளையாடதே பாப்பா நீ
ஒருவரோடும் பழகாதே பாப்பா
குருவிக்கும் சாதியினருக்கு பாப்பா அதை
கூட்டி வந்து விளையாடாதே பாப்பா

நாய்களுக்கும் சாதியுண்டு பாப்பா
நாய் வாலில் ஆசையது வேண்டாமடி
நன்றிக்கு ஒரு ஜீவன் உண்டடி _ அது
நம் சாதி நாயென்ற ஒன்றடி பாப்பா

சாதிகள் இல்லையடி பாப்பா அது
சங்ககால புலவனுரை
சாதிகள் உள்ளதடி பாப்பா இது
சமகால புலமையுரை

சாதிகள் உள்ளதடி பாப்பா குலம்
தாழ்ச்சி உயர்த்தி சொல்லல் இலாபம்
நீதிக்கு உயர்ந்த மதி சாதி
நித்தம் நீ கற்றிடடி பாப்பா

கூடி விளையாடாதே பாப்பா
குழந்தைகளிடமும் சாதியிருக்கு _ குல
சாதி காத்திட வேண்டும் அதை
குறைவின்றி செய்திடடி பாப்பா

அன்னப் படையலிலும் சாதி அதை
ஆக்கினைகள் செய்வதிலும் சாதி
பின்ன லழகிலும் சாதி பிறர்
மனை நோக்கிலும் சாதி

எள்ளி நகையாடலும் சாதி அதில்
ஏறி நிற்கும் திமிரும் சாதி
புள்ளி மானிலும் சாதி பிறரை
புண்படுத்தி பார்த்தலும் சாதி

கல்வி நிலையிலும் சாதி கலர்
கயிறு கட்டி வருதலும் சாதி
கொள்கை நிலையிலும் சாதி
கொடி பிடித்து வாழ்தலும் சாதி

ஏமாற்றி பிழைத்தலும் சாதி பிறரை
ஏறி மிதித்து வாழ்தலும் சாதி
ஏர்பிடித்து வாழ்ந்தாலும் சாதி
ஏதுமற்று நின்றாலும் சாதி

உண்டு மகிழ்ந்தவன் உயர்சாதி
உழைத்துக் கொடுத்தவன் கீழ் சாதி
உயிரில் இருப்பது மனித சாதி
உடற்குருதியில் தேடுவது மலசாதி

உப்பெடுத்தவன் கீழ் சாதி
உணவில் சேர்த்தவன் உயர்சாதி
அரிசி தந்தவன் கீழ் சாதி
அன்னமாய் உண்டவன் மேல்சாதி

சாக்கடை தந்தவன் மேல்சாதி அதை
சுத்தம் செய்தவன் கீழ் சாதி
சாமியை சுமந்தவன் கீழ் சாதி
சாமியை பூஜித்தவன் மேல்சாதி

வீசும் காற்றிலில்லை சாதி
வேசிகள் வீட்டிலுமில்லை சாதி
வீம்போக்கு மனிதரிடம் சாதி அதை
வீம்புக்கென்றே வைத்திருக்கான் சாதி

# நெஞ்சில் வச்சேன்

மனுசியா பொறந்து
மானத்தை கையில் பிடித்து
மறக்காம
மாமாங்கம் வாழ்ந்திட்டேன் ஆனாலும்
மாமனே

மாமாங்கம் காத்திருப்பேன்
மறுஜென்மமும் காத்திருப்பேன்
மறக்காம சொல்லி வச்சி
மாமன தவிக்க வச்சி
மனசறிஞ்சி தட்டிவிட்டேன்

புத்தி வர நாளாச்சி உன்
புன்சிரிப்பே நெனப்பாச்சி
புத்தி யெல்லாம் உன் நினைப்பு
புடம் போட்டு வைக்குதையா

ரெட்டை ஜடை பின்னலிட்டு
ஒத்த நெனப்பா உன்னை வச்சேன்
நெத்திப்பொட்டு நான் வைக்க
நெலக்கண்ணாடியா உன்னை வச்சேன்

தேரு வந்த வீதியில உன்
தேகத்தோடு உரசி வந்தேன்
காலார நீ நடக்க உன்
கைப்பிடிச்சி நான் நடந்தேன்

ஆசைகளை சேர்த்து வச்சி
அழகழகா என்னை வளர்த்தேன்

அத்தானின் சீரவரிசையாய் என்
ஆயுளையே நான் கொடுக்க

பாத்திக்கட்டி சேர்த்து வச்சி
பாதியிலே தட்டிவிட்டேன் என் மாமாவ
பாதியிலே தட்டிவிட்டேன்

கோவப்பழம் கொத்தி தின்னும்
கொஞ்சும் கிளி போல
கோபக்கார மாமன நான்
கொத்தி விட்டுப்போனேன்

நேர்நின்று உன்ன பாக்க
நிலையான சக்தியில்லை
குட்டியம்மா நினைப்பிருக்கா என்
குத்தமட்டும் நினைப்பிருக்கா

ஒளித்து வைத்த உன் நினைப்பு
ஓடைக்கரையில் அழ வைக்குது
பதுக்கி வைத்த உன் நினைப்பு
பாதி ராத்திரியில் அழ வைக்குது

பச்சை குத்தி வச்சியிருந்தா
பாதியிலே அழிச்சிருப்பேன்
நெஞ்சில் வச்சு தச்சுப்புட்டேன் எந்த
நெருப்பை வச்சி நானழிப்பேன்

கண்ணுக்குள்ளே உன்னை வச்சு
கண்ணீராய் வடிக்கிரேன் என் மாமாவ
கண்ணீராய் வடிக்கிரேன்

# தின்று கொழுத்த தீ

சதையில்லா
எலும்புக்கூட்டை
நிற்க வைத்துப்
பார்த்ததில்லை

பார்த்தேன்
விட்டம் வைத்த
வீட்டில் எரிந்து நின்ற
எலும்புக்கூட்டை

துப்பாக்கி
தோட்டாக்களின் வேகத்தை
வெடித்து சிதறிய
ஆணிகளில் பார்த்தேன்

ஆடையில்லா
மேனியில்
கோபத்தின் கனலாய்
ஆளுயர சுவர்

பிஞ்சு விரல்களால்
நெஞ்சிலடித்து அழுத
கண்ணீரை கண்டு
இறக்கமில்லை
எரிந்து கொழுத்த தீயிக்கு

விழுந்து கிடந்த
சாம்பல்கள் சொன்னது

விட்டத்தின் அளவுகள்
கைப்பிடியில் அடங்கியதை

நீரும் நெருப்பும்
பகை யென்றவர்கள்
காற்றும் நெருப்பும்
கைபிடித்த தோழரென்று
சொல்லவில்லை

எரிந்த நெருப்புக்கு
எண்ணெய் ஊற்றிய
காற்றைக் கண்டு
விழுந்து புலம்பிய
விம்மல்கள் மட்டுமே மிச்சம்

கதை பேசிய
திண்ணை சாம்பல்
கறைபடிந்து கிடக்கிறது
பேசிய வார்த்தைகளை எந்த
சாம்பலிடம் கேட்டறிவேன்

காப்பாற்றிய
கதவின் கண்ணீரை
எரிந்து போன
வாசக்காலுக்கு எப்படி
சொல்லி புரிய வைப்பேன்

மொட்டை யடிக்கப்பட்ட
வீட்டின் வேதனைகளை
அர்த்த ராத்திரியில் மட்டுமே
அடையாளம் கண்டேன்
கோரக்குரலாய்

வந்து போன
உறவுகள் சொன்னது
உயிரும்

பொருளும் சேதமில்லை
மரமே சேதமெனறு

உழைப்பு சேதமானதை எந்த
உறவும் பேசவில்லை
மரமும் உயிரென்று எந்த
மனிதரும் பேசவில்லை

மண்ணுக்கு வளமே
மனிதனும் மரமும் அந்த
மண்ணின் உரமோ
மனிதனும் மரமும்

உயிர் கொண்டு உழைத்த
உழைப்புக்கு உயிரில்லையோ இல்லை
உயிரை தந்த மரம் நம்
உறவில்லையோ தெரியவில்லை

கூடிழந்த
குருவிகளாய்
கூடி அழுத அந்த நாளை உயிர்
கூட்டின் உள்ளே வைத்து
அவ்வப்பொழுது
குமுறி அழுகிறது அந்த
தின்று கொழித்த தீயை நினைத்து

# தை பட்ட விதைநெல்லும் தத்தளித்த நீரவயலும்

காலச்சக்கரம்
கழன்றோடி
காக்கையின்
கறைபட்டு

விஞ்ஞானம் வந்த
வீட்டுக்குள்
வீட்டைஇழந்த
விதியால் மடிந்த

சிற்றின்ப உயிர்
சிட்டுக்குருவியை போல்
மனிதத்தன்மையும்
மனிதத்தையும்

மடைமாற்றி விட்டு
கபடமற்ற கன்னியை
கற்பழித்து சிரிக்கும்
காலத்திடம் இறக்கத்திற்கு

கையேந்தினால்
கையாலாகாத காலம்
கையில் எச்சில் துப்புகிறது

எத்தனை தேடல்
எத்தனை தேவை

எல்லாம் கிடைத்தும்
எப்பொழுதும் திருப்தியில்லை

உருகி உருகி உழைத்து
சிறுக சிறுகச் சேர்த்த
செல்வத்தின் மகிழ்ச்சி
கிழக்கு மலைக்கப்பால்

கிணற்றடியில் கிடக்கிறது
பசிக்கு உண்டு
பழையதை உண்டு
கிடைத்ததை உண்டு

கிடைக்காததை கேட்டுண்டு
உடலுக்கு வலியே
உணவாகி விட்டது

தூரத்து சொந்தம்
தூளிகட்டி யாட்டிடும்
உள்ளூர் சொந்தம்
ஊஞ்சல் கட்டி யாட்டிடும்

என்ற எண்ணம்
ஏழுகடலுக்கப்பால்
எருக்கஞ்செடியாய் நிற்கிறது

விரக்தியின் சிரிப்பும்
வெறுமையான நாட்களும்
நிர்வாணமாக நிறுத்தி
நிவாரணம் கேட்குது காலம்

தென்மேற்குப் பருவமழை
தேடிவரவில்லை
வடகிழக்குப் பருவமழை
வழிப்போக்காய் கூட வரவில்லை

நீர் தத்தளித்த வயல்
நெடும்பள்ளம் வைத்துக் கொண்டு
வா…வா… வென்று
வாய்பிளந்து அழைக்கிறது

வந்தது பொங்கலென்றும்
பெரியது
பெரும் பொங்கலென்றும்
மணத்தது

மாட்டுப்பொங்கலென்றும்
காணவில்லை
காணும் பொங்கலென்றும்
கறைந்து போகிறது

அன்றொரு காலம்…….
ஐப்பசி
அடைமழையில்
ஆறு குளம் நீர் பிடித்து

நண்டு
நத்தை பொருக்கி தின்று
நடுங்கும் குளிரை போக்கிக்கொண்டு
தைப்பட்ட விதைவாங்கி

தத்தளித்த நீர் வயலில்
தானியத்தை தெளித்துவிட்டு
கூர் விட்டு நின்றதை
கூடிநின்று ரசித்தோம்

ஏர் மாடுழுத வயலில்
ஒதுங்கி நின்ற சேற்றுக்களை
ஒவ்வொன்றாய் பிரித்துப் போட்டு
வயலெங்கும் நீர் பிடிக்க

வரப்புகளை உயரத்திக்கட்ட
காலை

மாலை சென்றுவந்தோம்
காலில் இருந்த சேற்றுப் புண்ணோடு

காளையை கழுவி
கண்பட்ட யிடமெல்லாம் பொட்டிட்டு
மாவிலை தோரணையில்
மாலை கட்டியிட்டு

சாயும் பொழுதில்
சாம்பிராணி புகையோடு
சத்தமிட்டு சொன்னோம்
பொங்கலோ பொங்கலென்று

கூடிநின்று
கும்மியடித்து பல கேளி
கூத்துக்களை செய்துவிட்டு

வாய்விட்டுச் சிரித்து கொஞ்சம்
வக்கனையோடு வாழ்ந்தோம்
காணும் பொங்கலில்

நாள் வந்த
நாற்றுக்களை சேற் பிடித்த
வயலெங்கும் ஒவ்வொன்றாய்
எண்ணி வைத்து

கொஞ்சம் நாளில் களைபறித்து
பூ விட்டு
காய் விட்டு
முதிர்ந்த

நெல்மணிகளை பார்த்து
முதுமை கூட
இளமையாக துள்ளியது

கதிர் நெல்லும்
கதிர் அறுவாலும்

கதிர் வயலில் சண்டையிட்டு

களத்து மேட்டில்
கலந்து பேசி
சமாதனத்தில் வீடுவரும்

நட்ட பயிர்
நஷ்டத்திலே விட்டாலும்
லாபமென்றே

அளந்து கொண்டோம்
பெயரளவு லாபத்திற்கு
பேராசைப்பட்டு

ஆடிவிலைக்கு
ஆசைப்பட்டு
ஆளுயர சேர்கட்டி
அறுவடை நெல்லை

அதில் கொட்டி
விலையே ஏறாமல்
விற்கும் பொழுது

ஏறாத விலைக்கா
இத்தனை பாடென்று கொஞ்சம்
வெட்கித்தான் போனோம்

இருந்தும்
இறுகிப்போன மண்ணைப்போல்
இறுகிய மனதெங்கும்
மீண்டும் அந்த

மீண்டு வரா நாளை
மீட்டெடுத்து
இறப்பதற்குள்
விதைப்பதற்கு ஆசைப்பட்டு

காத்திருக்கிறோம் நானும்
என்
தைப்பட்ட விதைநெல்லும்

# முகவரி தந்துவிடு

மானத்தை
மறைத்த ஆடைக்கு
மனசை
மறைக்க தெரியலை

மனதில்
மறைந்திருப்பதை
மனம் விட்டு பேசவும்
மனதிற்கு தைரியமில்லை

இதற்கு முன்னி ருந்ததில்லை
இப்படியொரு சுக அவஸ்தை
இதய வீட்டை நிறைத்த
இலவம் பஞ்சு மூட்டையாய்

அளவெடுத்து தைத்த
ஆடை உடுத்த அது
அழகை கூட்டி என்னை
அழகாய் காட்டுது

அழகனை நினைத்த
அழகா ஆடையால் அழகா உன்
நினைவில் வந்த அழகா என்னில்
நிறைந்ததால் வந்த அழகா

அளவற்ற ஆசைக்கும்
அன்பின் காதலுக்கும்
பொறுத்திருக்க தெரியலை
பொத்தி வைக்கவும் தெரியலை

முந்தானை மூட தெரியும் உன்
முகமங்கே மூடி வைக்க தெரியும்
மூச்சாய் நீயிருக்க தெரியும் அது என்
மூச்சுள்ளவரையும் இருக்கும்

பாதக்கொலுசின் ராகமும்
பாவையென் ராகமும்
வேறு வேறாய் பாடினாலும்
விடியலின் மெல்லிசையோ நீ

ஒற்றை பார்வை தந்து விட்டு
ஒரு நொடி சென்று விட்டாய்
ஒவ்வோர் நொடியும்
ஒவ்வோர் யுகங்களாய் நகர்கிறது

கேட்க மறந்த
கேள்வி உன் பெயரென்ன
காற்றில் சொல்லி விடு
காதோரம் கேட்டு மகிழ உன்

முகம் மட்டும் பரிச்சயம் வேறு
முகம் காண மறுக்குது
முகவரி தந்து விடு உன்
முழு நிலா நானென்று

# புரியாத புதிர்

புதிய விடியல்கள்
புதிய புதிய புதிரை
புரியாமல் போடுகிறது சில
புரியாத புதிர்களுக்கு
புதிய கேள்விகளோடு
புரியாத புதிரின்
புதிய விடைகளை தேடும்
புரியாத புதிர்

பிறப்பின் வர்ணம்
பிரம்மனின் படைப்பெனில்
வர்ணத்தின் நிறம்
வானத்தை போலில்லையே ஏன்

அகிலத்திற்கு படி
அளந்த கடவுள்
ஒரே அளவில்
ஒன்றாய் அளக்கவில்லையே ஏன்
புரியாத புதிர்

காக்கும் கடவுள்
காலில் படைத்ததேன்
பாரதத்தின் கடவுள்
பாதத்தில் படைத்ததேன்
மேலுலக கடவுள்
கீழ் நிலையில் படைத்ததேன்
புரியாத புதிர்

பறையடித்தவன் பிள்ளை
பறையடிக்கட்டும்
துணி துவைத்தவன் பிள்ளை
துணி துவைக்கட்டும்
நாவிதன் பிள்ளை
நாவிதனாகட்டும்
செருப்பு தைத்தவன் பிள்ளை
செருப்பு தைக்கட்டும் கோயிலில்
தட்டேந்தியவன் பிள்ளை
தட்டேந்தவில்லையே ஏன்
புரியாத புதிர்

கோயிலின் உள்ளே
தட்டேந்தியவனும்
கோயிலின் வெளியே
தட்டேந்தியவனும்
தொழிலின் வகையில் ஒரே
தொழில் தான்
ஜாதிகள் மட்டும்
ஜாடைக்கு தகுந்தவாறு ஆனதெப்படி
புரியாத புதிர்

கற்பகிரகத்தில்
கால் பட்டதில்லை
காசுக்கு தகுந்த
கடவுளின் காட்சி
தீட்டுக்காரன் பணம் மட்டும்
திருவிழா கடவுளின் கழுத்தில்
புரியாத புதிர்

கற்பகிரகத்தில்
காமுகன் ஒருவனின்
காம விளையாட்டை கடவுள்
கண்டு ரசித்தாரா
கண்ணிருந்தும் குருடாய் நின்றாரா
புரியாத புதிர்

தாய் குந்திதேவி
தந்தை சூரியதேவன்
வளர்ந்தவர் தேரோட்டி
பிள்ளை கர்ணனோ
பிறப்பால் சூத்திரன்
புரியாத புதிர்

அவதாரம் பத்திலும்
அவதரித்தார் கடவுள்
பத்து அவதாரத்திலும்
பகைவனும் அவதரித்தா னென்றால்
கடவுளுக்கு இணையான சக்தி
கயவர்களுக்கும் உண்டோ?
புரியாத புதிர்

வில் வித்தை அந்தணர்க்கே
வேட்டையாடுதல் யார் தொழில்
மாமிச முன்னா மாந்தர்
மான் வேட்டையாடிய தெப்படி
புரியாத புதிர்

அம்மையார் நோய் தீர்க்க
அனுமார் தூக்கிய மலை
அபூர்வ மூலிகை மலை
மலையை தூக்கிய அனுமான்
மாந்தரை தூக்க முடியவில்லையோ
மண்ணில் பாலம் ஏனோ
புரியாத புதிர்

அப்பாவின் மனைவிகள்
அறுபதாயிரம்
அற்ப சந்தேகம் வரவில்லை
தலை மகனுக்கோ
தன்மனைவி மீது சந்தேகம்
நெருப்பை வைத்து
கற்பை நிருபித்த கடவுள்

தற்கொலை செய்து கொண்டதேனோ
புரியாத புதிர்

வர்ண பேதத்தின்
வகைகள் நான்கு
வேத புத்தகத்தில்
வேதத்தின் வகை நான்கு
வர்ணத்தை நான்காக்கிய கடவுள்
வர்ணத்திற்கு ஏற்ற கடவுள் எங்கே
புரியாத புதிர்

சாதிகளை படைத்த கடவுள்
சாதிகளுக்கு ஏற்ற வேதம் எங்கே?
சாதிகளுக்கு ஏற்ற மந்திரம் எங்கே?
சாதிகளுக்கு ஏற்ற கோயில் எங்கே?
சாதிகளுக்கு ஏற்ற கடவுள் தான் எங்கே?
புரியாத புதிர்

பாரத தேசமெல்லாம்
பாரத தாயின் பிள்ளைகள்
ஒரு பக்க மார்பில்
உயர்ந்தோர்க் கென்றும்
ஒரு பக்க மார்பில்
தாழ்ந்தோர்க் கென்றும்
பால் கொடுத்தவள்
பாரத தாயா?
பாதகத்தி தாயவளா?
புரியாத புதிர்

கடவுளின் மொழி
மக்களுக்கு புரிவதில்லை
மக்களின் மொழி
கடவுளுக்கு புரிவதில்லை
இடைத்தரகர்களின் மொழியோ
இருவருக்கும் புரிவதில்லை
கடவுள் என் பக்தியை

ஏற்றாரா?
ஏசுகிறாறா? எல்லாம்
புரியாத புதிர்

அவனுக்கனா சட்டம்
அவனுக்கானவர் எழுதியதென்று
அவனையே கொலை செய்து
அவனுக் கானவரின் சட்டத்திலே
அவசர பிணையில் வெளியே வந்து
அவனையும்
அவரையும்
அவர் தந்த சட்டத்தையும்
அருவருப்பாய் பேசும்
அறிவார்ந்த மக்கள்
புரியாத புதிர்

உண்ணும் உணவு
உணவில் உப்பு
உடுத்தும் உடை
உடை நெய்த தறி
உறங்கிய இடம்
உறங்கும் பங்களா
உழைத்த உழைப்பு
உழைப்பின் வியர்வை
ஊதிய கூலி
உலா வரும் பணம்
உடலில் ரத்தம்
உயிரின் துடிப்பு
ஒன்றிலும் ஒட்டவில்லை
ஒரே சாதி ரத்தம்
வயிறு வளர்ப்பதில் மட்டும்
வானளாவிய சாதி சுத்தம்
புரியாத புதிர்

உயர்ந்தோரென்று ஊறிகொள்ளும்
உத்தம வில்லன்களே அது

உங்களுரிமை
உங்கள் மனப்பித்து
உங்கள் ஆணவம்
உங்கள் அகங்காரம்
என்னை
தாழ்ந்தோர் என்று சொல்ல
உம்மை
படைத்த கடவுளுக்கும்
உரிமையில்லை
இம் மண்ணில் பிறந்த
எம் மனிதருக்கும்
எத் தகுதியுமில்லை இதுவும்
உம் போன்ற மனிதர்களுக்கு
புரியாத புதிர்

# குற்றமில்லாத குற்றம்

ஆடைக்குமேல்
அங்கம் தீண்டல் பெண்ணின்
அங்கம் தீண்டல்
குற்றமல்ல_பாலியல்
குற்றமல்ல

ஆயுத கைகளால்
அங்கே யிங்கே வன்மையாய்
அழுத்தி தீண்டல்
குற்றமல்ல_பாலியல்
குற்றமல்ல

செல்லச்சிரிப்பின்
சினுங்களோடு சேர்தாடும்
சிறுமியை கண்டு
கூன் விழுந்த உடம்பில்
கூடி புடைக்கும் நரம்பால்
பாலுணர்வு தீண்டல்
குற்றமல்ல_பாலியல்
குற்றமல்ல

முதுகெலும்பை உடைத்து
கழுத்தெலும்பை முறித்து
காம சுகம் கண்டு_கண்
காணாமல் எரித்தல்
குற்றமல்ல_பாலியல்
குற்றமல்ல

விருப்ப பட்டு விளையாடு
விரும்பி வந்தால் வேட்டையாடு
வேலியென்ன
வெளியென்ன
ஆசைக்கில்லை வயது
அதை எடுக்க தெரிந்தால்
குற்றமல்ல_பாலியல்
குற்றமல்ல

பிஞ்சு விரலை
பித்தநிலை தானறிய
நம்பி கைகொடுத்தால்
நச்சுப் பாம்பாய் நிற்பது
குற்றமல்ல_பாலியல்
குற்றமல்ல

சத்தியத்தை நம்பி
சாமியிடம் சென்றால்
சல்லாபம் ஏறி
சாம்பலாக்கி பார்ப்பது
குற்றமல்ல_பாலியல்
குற்றமல்ல

தீர்த்தத்தை கையிலேந்தி
தேகத்தில் தெளித்து
தீட்டைக் கழித்தால்
தேகம் எரிந்து
தீச்சாம்பலாவது
குற்றமல்ல_பாலியல்
குற்றமல்ல

அப்பனென்றான்
அண்ணனென்றான்
அன்பான நண்பனென்றான்
அப்பப்போ_கற்பபைய
அழுத்தி பிடிப்பான்_அது

குற்றமல்ல_பாலியல்
குற்றமல்ல

வீட்டிலும்
வீட்டைச்சுற்றியும்
வீதியிலும்
வெளியே சென்றாலும்
வேலைக்கு சென்றாலும்

துளசி செடியை சுற்றிய
அரளி விதையைப் போல்
அல்லல் வாழ்வு _அது
குற்றமல்ல_பாலியல்
குற்றமல்ல

மனநோயாளி
மண்ணாலும் நாட்டில்
மனிதப்பண்பும்
மனிதத் தன்மையும்
மனித நேயமும் தேடுவது
குற்றம்_மாபெரும்
குற்றம்

# அப்பாவை படிக்கிறேன்

அஞ்சு வயசுல
அறியா வயசுல

அரிச்சுவடி நான் படிச்சேன்
ஆத்திசூடி நான் படிச்சேன்

அப்பாவோட அருமைய
அப்பவே நான் படிக்கல

அப்பாவாக நானாகி என்
அப்பாவ படிக்கிறேன் அந்த

அழுக்குச் சட்டை மனுசனோட
அருமையதான் படிக்கிறேன்

கைபிடித்து நானெழுத
கையருவா நீ புடிச்ச

கணக்குப் பாடம் நான் படிக்க
கைகட்டி வேலை செஞ்ச

கால்செருப்பு நானணிய
கரும்புக் கட்ட நீ சுமந்த

பள்ளி சட்டை நானணிய
பருத்தி மூட்டை நீ சுமந்த

உழைப்போட வேர்வையில்
உன்னுருவம் நீ தொலைத்த

உயரத்தில் எனை வைக்க உன்
உயிரை மட்டும் பிடித்து வைத்த

பாசத்தோடு என்னை வளர்க்க
பட்டப்பாட சொன்னதில்ல நீ

பட்டகஷ்டமெல்லாம்
பாடுபட்டு நானறிஞ்சேன் அப்பாவா
பாடுபட்டு நானறிஞ்சேன்

சீமையில நான் படிக்க
சிறுவாடு சேர்த்து வச்ச

பட்டம் வாங்கி நான் வர
பசுமாட்டை விற்றுவிட்ட

வேலையில் நான் சேர
விளைந்த நிலம் விற்றுவிட்ட

தேர்மீது வந்த சாமிய
தோள்மீது ஏறிப்பார்த்தேன்

சாமிமேல ஏறி நான்
சாமிய பார்த்தேனென்று

சத்தியமா தெரியல அப்பவே
சத்தியமா தெரியல என் அப்பாவே

வரம் வாங்கிப் பெற்றெடுத்து
வாழ்வு தந்த அப்பாவே என்ன

வரம் வாங்கி பெற்றெடுப்பேன் எந்த
வரம் வாங்கி பெற்றெடுப்பேன் எனக்கு
வாழ்வு தந்த அப்பாவ.. என் அப்பாவ

பஞ்சா நீ பறந்த
பஞ்சம் வந்த பூமியிலே

நித்தம் நித்தம் நானுறங்க
நெஞ்சு மெத்த நீ கொடுத்த

கட்டந்தரை வலிச்சதில்லை
கஞ்சி தண்ணி வெறுத்ததில்லை

நெஞ்சு குழியில் நிற்குதப்பா நீ
நித்தம் ஊட்டிய நீராகாரம்

பஞ்சு மெத்தை என் படுக்கை
பல நாளா தூங்க விடல

நெஞ்சு மெத்த கேட்குதப்பா
நித்தம் உன்னை தேடுதப்பா

இந்த ஜென்மம் போதுமப்பா
இப்படியே வாழனுமப்பா நீ

பட்டபாட நான் தீர்க்க என்
பையனா பிறந்திடப்பா

இந்த ஜென்மத்திலே
இன்னொரு
பையனா பிறந்திடப்பா…

# FREETAMILEBOOKS.COM

## மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

## ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

## தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

## சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

### தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை “யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்” என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது “Creative Commons” எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் “All Rights Reserved” எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் “All Rights Reserved” என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை “Creative Commons” உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது

வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை  உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு  நமக்கு
அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை "மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்"-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

## FREETAMILEBOOKS.COM

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6" devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை

எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை "Creative Commons" உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்
2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்
3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://www.kaniyam.com
5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஒர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

**துவக்கம்**

உங்களது வலைத்தளம் அருமை (வலைதளத்தின் பெயர்).

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

**முடிவு**

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் "Creative Commons License"-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

**மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?**

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

**இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?**

குழு – http://freetamilebooks.com/meet-the-team/

## SUPPORTED BY

கணியம் அறக்கட்டளை http://kaniyam.com/foundation

# கணியம் அறக்கட்டளை

## தொலை நோக்கு – Vision

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

## பணி இலக்கு – Mission

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

## தற்போதைய செயல்கள்

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

## கட்டற்ற மென்பொருட்கள்

- உரை ஒலி மாற்றி – Text to Speech
- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஐஓஎஸ் செயலி
- WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்
- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

## அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்

- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்
- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்
- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்
- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்

- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

## வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

# நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**
**Account Number : 606 1010 100 502 79**
**Union Bank Of India**
**West Tambaram, Chennai**
**IFSC – UBIN0560618**
**Account Type : Current Account**

**UPI செயலிகளுக்கான QR Code**

BHIM UPI Payments Accepted at

**Kaniyam Foundation**

**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.

Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.